# கல்கி

KALKI 24-4-83

ரூ 1.20

இந்த இதழில்:
ரஜினி நடித்த
முதல் ஹிந்திப் படம்!



# "காம்ப்ளான் ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடல் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான் ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.




"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போ-ஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக— சாக்கலேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், *ஸ்ட்ராபெரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்.

**திட்டமிட்ட பரிபூரண உணவு**

# காம்ப்ளான்®

GLC. 10-2015 TM






## விண்வெளி பயங்கரம்

விண்வெளிப் பயணங்களை வைத்துப் படமெடுப்பது இப்போது ஹாலிவுட்டுக்கு ஃபாஷனாகி விட்டது. கற்பனைக்குத் தாராளமாக இடம் வைத்துத் தந்திரக் காட்சிகளுக்கு ஏராளமாக வாய்ப்பளிப்பது விண்வெளிக் கதை.

ஏலியன் (Alien) என்றால் அன்னியன் என்று பொருள். ஐந்து ஆண்களும் இரு பெண்களுமாக ஏழு விண்வெளி வீரர்கள் தங்கள் விண் கலத்தில் சென்றுகொண்டிருக்கும்போது திடுமென ஓர் அந்நியனால் பாதிக்கப்படுகிறார்கள். 'அவன்' என்பதா 'அது' என்பதா என்றே புரியாத அந்தப் பயங்கரம் இவர்களை அச்சுறுத்தவும் செய்கிறது. ஆச்சரியப்படவும் வைக்கிறது. நெருக்கடி நிலையில் அந்த மர்மச் சக்தியுடன் போராடும் ஏழு பேரும் எப்படி நடந்துகொள்கிறார்கள்? அவர்கள் குண இயல்புகள் எப்படி மாறுகின்றன என்பவை ரசமான திரைக்கதை உருவம் பெற்றுள்ளன.

திகில், திகில்,—பயம்! பயம்!

WALT DISNEY PRODUCTIONS presents

# HERBIE GOES BANANAS




மனிதாபிமானத்தின் உச்ச கட்டத்தில் இயந்திரங்களுக்குக்கூட இதயம் உண்டெனக் கருத முடியும் என்பது வால்ட்டிஸ்னி நிறுவனத்தின் தீர்மானம். இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் ஹெர்பி என்று பெயர் கொண்ட ஒரு சிறு மோட்டார் காரை வைத்துப் படம் எடுக்கிறார்கள். முதல் படத்தில் ஹெர்பி அன்பு செய்தது. ஊக்கமுடன் உழைத்தது. வருத்தப்பட்டது. ஏன் தற்கொலை முயற்சியில் கூட இறங்கியது!

இப்போது திரையிடப்படும் இந்த இரண்டாவது படத்தில் பத்து வயதேயான பாக்கோ என்ற பிக்பாக்கெட்டிடம் அன்பு செலுத்துகிறது ஹெர்பி. ஒரு கள்ளக் கடத்தல் கும்பலுக்குச் சொந்தமான மைக்ரோ ஃபிலிம் பாக்கோவிடம் சிக்க அதனைத் திரும்பப் பெற க. க. கும்பல் முயல, ஹெர்பி உதவியுடன் தப்பி விடுகிறான் பாக்கோ. ஆனால் டி. ஜே., பீட் என்ற இருவரிடம் சிக்குகிறான். டி. ஜே.யின் பர்ஸை ஏற்கனவே தேட்டை போட்டவன் பாக்கோ. அதைத் திரும்பப் பெறும்போது ஹெர்பி டி. ஜே.யின் கவனத்தைக் கவர, அதன் வேகத்தையும், ஆற்றலையும் கருதி பிரேஸில் நாட்டில் நடக்கும் மோட்டார் ரேஸில் அதனைச் சேர்க்க எண்ணுகிறான் டி. ஜே. கப்பலேறுகிறது ஹெர்பி. டிக்கெட்டில்லாப் பயணியாக அதனுள் ஒளிந்திருக்கிறான் பாக்கோ. இது அம்பலமானபோது பாக்கோவைக் காப்பாற்ற ஹெர்பி போராடுகிறது. கோபமடைந்த கப்பல் கேப்டன் ஹெர்பியைக் கடலில் எறியச் சொல்கிறான். ஆனால் ஹெர்பி கடலில் நீந்திப் போய்க் கரை சேர்கிறது.

கப்பல் கரை தட்டும்போது தப்பிவிடும் பாக்கோ பல இடங்களில் அலைந்து திரிந்து கடைசியில் மறுபடி ஹெர்பியைக் கண்டு பிடிக்கிறான். கிப்போர்கள் நடந்ததும், ஹெர்பி புதுத் தெம்புடன் செயல்பட்டுக் கள்ளக் கடத்தல் கும்பலைப் பிடித்துத் தருவதுடன், திரைப்படத்துக்கு இன்றியமையாத இரு காதலர்களை இணைத்து வைக்கவும் செய்கிறது. பிறகென்ன.

சிரிப்பு, சிரிப்பு — கபம், கபம்!

த.மூ.ரா.



# இறுதியில் பெற்றீர் உறுதி



# பிலிப்ஸ் கேஸட் ரெக்கார்டர்கள்

## பணத்திற்கேற்ற மதிப்பு.

## அத்துடன் பிலிப்ஸ் உத்தரவாதம்

உலகத்தரமான இயக்கத்திற்கு உத்தரவாதமும், பிலிப்ஸ் வழங்கும் உலகத்தரமான ஸர்விஸ் பெறும் உறுதியும். கேட்டுப்பாருங்கள் பிலிப்ஸ் வைத்திருப்பவர் யாரை வேண்டுமானாலும். இந்த உறுதியை வேறு எவருமே அளிக்க முடியாது.

**N 2218**

கைக்கு அடக்கமான உள்ளமைந்த எலெக்ட்ரெட் மைக்ரோஃபோன், பியானோ-கீ கண்ட்ரோல்கள், 1800 mW உச்ச பவர் அவுட்புட்டுடன். பேட்டரி, மெயின்ஸ், வெளிப்புறம், வீட்டினுள் எங்கும் எந்த நிலையிலும் 'ப்ளே' மற்றும் ரெக்கார்ட் செய்யவல்லது.

**AM 122**

உள்ளமைந்த எலெக்ட்ரெட் மைக்ரோஃபோன், 1250 mW உச்ச பவர் அவுட்புட்டுடன். டேப் முடிந்ததும் தானே நிறுத்திக்கொள்ளும் வசதி.

ஃபெர்ரோ கேஸட்டுகள்





நினைவிருக்கட்டும்.
பிலிப்ஸ் தரத்திற்குப்
பின்பலமானது
பிலிப்ஸ்
ஸர்விஸ்!




# பிலிப்ஸ்

பிலிப்ஸ் — 50 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவில் இல்லங்களெங்கும் முழங்கும் நம்பகமான பெயர்.

CASPRR-9-203 TAM

# ஆவிதுளிர ஒரு அமுதநதி!

"**வா**ருங்கள் சகோதரர்களே! தட்சிணேசுவரம் சென்று ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தரிசித்துவிட்டு வருவோம். அவர் பக்தர்களுடன் எப்படிப் பழகுகிறார் என்பதையும், எந்நாளும் கடவுள் சிந்தனையில் ஈடுபட்டு அவர் எப்படிச் சமாதியில் ஆழ்ந்திருக்கிறார் என்பதையும் கண்ணாரக் கண்டு களித்துத் திரும்புவோம்.

இப்படி நம்மை அழைக்கிறார் நூலாசிரியர் "ம" தமது "ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்" என்ற திவ்விய காப்பியத்திலே.

"அமுத **மொழி**" என்று மகுடமிட்டிருந்தாலும், "**செவி** பெற்ற பயனுறுவதைப்" பற்றி மாத்திரம் சொல்லாமல், "**கண்ணாரக்** கண்டு களித்துத் திரும்புவது" பற்றியும் சொல்கிறாரல்லவா? இதைவிட இந்நூலுக்கு உயரிய விமரிசனம் எதுவுமில்லை.

• • •

**கு**டும்பப் பூசல்களில் மனமுடைந்த முப்பது வயதினரான "ம"வை திருவருட் தென்றல் தக்ஷிணேசுவரத் தவமுனியிடம் கொண்டு தள்ளியது 1882 தொடக்கத்திலே. உடைந்த மனம் உருப்படியாயிற்று. அன்றிலிருந்து, ருசி கண்ட பூனை இந்த அமிருத கலசத்திடம் அடிக்கடி வந்தது. 1886 ஆகஸ்டில், கலசம் உடைந்தது; அமுதம் ஆராவமுதான அன்னையோடு கலந்து விட்டது. அதன் பின்னரும் ஓராண்டுக்கு மேல் "ம" பிற்கால விவேகாநந்தர், பிரம்மானந்தர் முதலிய ஞானக் கன்றுகளுடன் நெருங்கித் தொடர்பு கொண்டிருந்தார். இந்த ஐந்தாண்டுகளில் அவர் நுணுக்கமாகவும், தெளிவாகவும், எழுத்துக்கெழுத்து உண்மையாகவும் எழுதிய நாட்குறிப்புகள் "ஸ்ரீராம கிருஷ்ண கதாம்ருதம்' என்ற மாபெரும் வங்காள மொழி நூலாகத் திருவுருக் கொண்டது. அவதார புருஷரொருவரின் அன்றாடச் செயல்களையும் அருள் மொழிகளையும் இத்தனை அருகிருந்து அருமையாக, விரிவாகக் கொடுக்கும் நூல் வேறெதுவுமில்லையென்று இதன் ஆங்கில ஆக்கமான "The Gospel of Sri Ramakrishna"—வை ரஸித்த மேனாட்டு நல்லறிஞர்கள் கூறுகிறார்கள். "ம" இதுவே ஜன்மப் பணியாக விதிக்கப்பட்டு இறைவனால் அனுப்பப்பட்டவர் என்று ஐயமறக் காட்டுவதற்கேபோல, 1932 ஜூன் 3–ந் தேதி இரவு மூலநூலின் இறுதியான ஐந்தாம் பகுதியின் கடைசி அச்சுத்தாள்களைச் சோதித்துச் சரி செய்தார்; மறுநாள் உதயத்துக்குள் ஐயன் தாளிணையில் சேர்ந்து விட்டார்!

வங்காளி மூலத்திலிருந்தே தமிழ் செய்து மூன்று பகுதிகளாக வெளியிடும் மஹோன்னதத் தொண்டினை சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தினர் மேற்கொண்டு, அறுநூறு பக்கம் கொண்ட அருமையான அருள்மை வாய்ந்த முதற் பகுதியைத் தற்போது நமக்கு வழங்கியிருக்கிறார்கள். மற்ற பகுதிகளும் விரைவே தொடரும்.

பளிங்கு போல் தெள்ளிய மொழி பெயர்ப்பு. பாடல்களும் நீந்தமிழில் ஆக்கப்பட்டு நெஞ்சைச் சுண்டுகின்றன.

ஆன்மிய எவரெஸ்டான மஹாபுருஷரின் அன்றாட நடைமுறைகளிலும், உரையாடலிலும் நம்மை ஈர்க்க என்ன இருக்கப் போகிறது என்று அஞ்ச வேண்டாம். ஸமாதி பரவசத்தில் பனிக்கட்டியாக நிற்பது மட்டுமின்றி 'ஸரள பாலவத்தில் உடனேயே பனித்துளியாகி நம் மன மலருக்குள்ளும் இதமாக உருளக் காண்பீர்கள். இந்த நிமிஷம் சிலிர்க்கச் செய்யும் சிகர அநுபூதிமான் அடுத்த நிமிஷமே சிரித்துக் குலுங்க




வைக்கும் ஒட்டுறவோடு கிட்டி நிற்பார். நூல் கைக்குத் தான் கனமேயன்றி, கருத்துக்கோ கனமான தத்துவங்களையும் லேசாக்கியே தும்பை மலர்களாகச் சொரிகிறது. அத்யாத்ம வாழ்வுக்கான ஸகலத்தையும் கதைகளில், உவமைகளில், நவரஸ உரையாடல்களில் எளிதே பெற்று விடுகிறோம். பக்தியோடு, பாராயணம் செய்தால், நம் நெஞ்சகத்துக்குள்ளேயே பரம பவித்ரனின் ஸாந்நித்தியத்தை அடைவோம்.

-ரா. கணபதி

(ஸ்ரீ ராம கிருஷ்ணரின் அமுத மொழிகள்- முதற் பகுதி: ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை-600 004. விலை ஒவ்வொரு பாகமும் ரூ. 35. மூன்று பாகங்களும் 'சேர்த்து ரூ. 100. மே 30-க்குள் பதிவு செய்து கொள்பவர்களுக்கு ரூ. 65)



✕ மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமி கோபுரம்

# மடியில் தவழும் முகுந்தன்

## ஆனந்தி

''குருகு பாயக் கொழுங்
கரும்புகள் நெரிந்த சாறு
அருகு பாயும் வயல்''

என்ற சம்பந்தர் பெருமான் தேவாரத்தை ரசிகமணி டி. கே. சி. ரசித்து ரசித்துச் சொல்லக் கேட்டிருக்கிறேன். குருகு என்றால் சிறு மீன்கள், மீன்கள் பாயும் படி வயல்களின் நீர்வளம் இருந்ததாம்! ''கொழுங் கரும்புகள் நெரிந்த சாறு'' என்று திரும்பத் திரும்ப டி. கே. சி. மடக்கிக் கூறும்போது அந்த ஒலியின் சுவை கரும்பின் சுவையை விட இனிமையாக இருக்கும்.

திருவாரூரிலிருந்து மன்னார்குடிக்குப் போகும்போது இந்தப் பாடல் ஞாபகத்துக்கு வந்தது. வடபாதிமங்கலம் சர்க்கரை ஆலைக்கு லாரி லாரியாகக் கொழுங் கரும்புகள் போகின்றன. ''நமது காலைக் காப்பிக்குச் சுவை கூட்டப் போகின்றன'' என்று நமக்குத் தோன்றுகிறது. ஆனால் சம்பந்தர் பெருமானோ கரும்பு வயல்களைக் கண்டதும் தித்திக்கும் தமிழ்க் கவிதையைத் தந்துவிட்டார்.

மன்னார்குடியில் நெருக்கமான கடைகள் உள்ள தெருவில் நுழைந்து சென்றதும் ராஜகோபுரம் கம்பீரமாக நிற்பது தெரிகிறது.

''இகிரி சங்கேந்தும் செங்கை
திகழ்ராஜ கோபாலரை''

என்ற ஆனந்தபைரவி வர்ணத்தின் இனிய சொற்களுக்குப் பல நடனமணிகள் அபிநயம் பிடிப்பதைப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் சங்கொடு சக்கரம் ஏந்தும் நடக் கையனை கண்ணனின் தோற்றத்தைக் கற்பனை செய்து கொள்வேன். எத்தனையோ ஆண்டுகளாகக் கற்பனையில் கண்டு மகிழ்ந்த நாயகனைராஜகோபாலனை நேரில் கண்டது ஒரு ஆனந்தமான சுகானுபவம்.

வலது கரத்தில் தங்கக் குச்சி. அதில் மூன்று மடிப்புள்ள சாட்டை. இடது கரம்



✕ ராஜகோபாலஸ்வாமி

பத்தினி பாமாவின் மீது படிந்திருக்கிறது. வலதுபுறத்தில் ஸ்ரீ ருக்மிணி தன் கணவன் அழகில் சொக்கி நிற்கிறாள். மாயக் கண்ணன் மாயப் புன்னகை தவழ, செழுமையான வனப்புடன் பின்னால் நிற்கும் பசுவின் மீது சிறிது சாய்ந்து நிற்கிறார். ஜரிகைக் கரை போட்ட சிவப்புப் பட்டாடை முழங்கால் தெரிய உடுத்திக் கொண்டு அதே வண்ண ஆடையில் இடைக்குலத்தாரைப் போலவே தலையிலும் சுற்றிக் கொண்டு சிறிது காலைச் சாய்த்து ஒய்யாரமாக நிற்கிறார் உத்ஸவ மூர்த்தியான ஸ்ரீ வித்யா ராஜகோபாலர். மிகவும் பிரயாசையுடன் கண்களை நிமிர்த்திப் பின்னால் தெரியும் மூலவரைப் பார்க்கிறோம். அர்ச்சனை செய்து தீபாராதனை காட்டுகிறார் அர்ச்சகர். ''மூலவர் பெயர் ஸ்ரீ வாசுதேவன். நின்ற திருக்கோலம். சங்கு சக்கர கதாபாணியாக ஸ்ரீதேவி பூதேவி சமேதராக ஸேவை சாதிக்கிறார்'' என்று அர்ச்சகர் கூறும்போது திருமுக மண்டலம் பளிச் சென்று தெரிகிறது. அருள் பார்வையைக் கண்டு மகிழ்கிறோம். வெள்ளிக் கவசம் மின்னுகிறது.

பிறகு ராஜகோபால ஸ்வாமிக்குக் கற்பூர ஆரத்தி காட்டிக் கொண்டே அவர் அவனுடைய திருக்கோலத்தை வர்ணிக்கும்போது உலகமே ஒரு கணம் அவன் அழகில் மயங்கி நிற்பதாகத் தோன்றுகிறது. பதக்கங்களும் மாலைகளும் பளபளவென்று மின்னுகின்றன.

அருகிலுள்ள மூர்த்திகளுக்கும் தீபாராதனை செய்து அவர்களுடைய மகத்துவங்களைக் கூறிக் கொண்டே போகிறார். ''இவர் நவநீத கிருஷ்ணர். இவர் சந்தான கோபாலன். கையில் எடுத்துக் கொண்டு நாபி கமலத்தில்இஷ்டமான அளவு பணத்தைவைத்துப் பிரார்த்தனை செய்து கொண்டால் ஸகல அபீஷ்டங்களும் நிறைவேறும்'' என்கிறார்.

தீர்த்தம் வாங்கிக் கொள்ளும்போது, 'என்ன? கையில் எடுத்து மடியில் வைத்துக் கொள்வதா?' என்று அதிசயித்துக்கொண்டே சந்தான கோபாலனைப் பார்த்தேன். ஆதிசேடன்மீது சின்னஞ் சிறு பாலகனாகச் சுவைத் துண்ணும் பாதகமலத்துடன் கொஞ்சுகிற முகபாவத்துடன் சயனித்திருக்கும் திருக்கோலம். அர்ச்சகர் சுவாமிகள் கண்ணனைத் தூக்கிக் கையில் கொடுத்துவிட்டு, ஏதோ சொல்லிக் கொண்டே போகிறார். ஒன்றும் காதில் விழவில்லை. இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவானை நமது கரங்களில் தாங்கிக் கொண்டிருக்கிறோம் என்ற மனச் சிலிர்ப்புடன் உவகை பொங்குகிறது. கண்களில் நீர் ததும்பவே குழந்தையின் முழு அழகையும் சரியாகப் பார்க்க முடியவில்லை.

என்ன கனம்? அகில புவனங்களையும் தனக்குள்ளே வைத்திருப்பவன் அல்லவா? லேசாக இருப்பானா? லேசுப்பட்டவனா? லேசாகக் கிடைக்கக் கூடியவனா? எத்தனை மகான்கள் பூஜித்துப் பூரித்தார்களோ? வாத்சல்ய பக்தியினால் துதித்துத் துதித்துக் காந்தியைப் பெற்ற கண்ணன் இவன். இவனை மடியில் இருத்திக் கொள்ள எவ்வளவு பாக்கியம் செய்திருக்கிறோம் நாம்? என்று மனத்தில் எண்ண ஓட்டங்கள். ''தொல்லை இன்பத்து இறுதி கண்டானே'' என்ற பாசுரத்தின் பொருள் இதுதானோ?

✠ துவாரபாலகர் வெண்கலத்தாலானது



எந்த அபிலாஷையும் நினைவுக்கு வரவில்லை. வரம் கேட்கத் தோன்றவில்லை. ஏங்கும் இதயத்துடன் கண்ணனை அர்ச்சகரிடம் கொடுக்கும்போது, ''மறுபடியும் தரிசனம் கிடைக்கட்டும்'' என்று அவர் கூறுவதே நமது அபிலாஷை ஆகிவிடுகிறது.

எந்தக் கோவிலிலும் வழிபடும் மூர்த்தியை அடியார்கள் கையில் கொடுத்துவிட மாட்டார்கள். குழந்தைக் கண்ணன் எளியவர்களிடம் அளவற்ற அன்பு கொண்டவன். அவனுக்கு மடி ஆசாரம் கூடத் தேவையில்லை. அன்பு காட்டுவோரிடம் தாவிச் செல்லும் குழந்தையைப் போலவே அவனும்

## தெய்வ தரிசனம்



✠ கோவில் தோற்றம்

நம்மடியில் தவழ்ந்து மகிழ்ச்சியில் நம்மை ஆழ்த்துகிறான்.

சந்தான கோபாலன் தன் இடத்துக்குச் சென்றதும் ஸ்ரீ வித்யா ராஜகோபாலனின் மீது பார்வை பதிகின்றது. பரவசமாய்ப் பூரித்து நின்று கொண்டிருக்கும்போதே திரை போட்டு விடுகிறார்கள். கனவுலகிலிருந்து பூவுலகத்துக்கு வந்த மாதிரி இருக்கிறது.

பின்னர் தாயார் சந்நிதிக்குச் செல்கிறோம். அழகு கொழிக்கும் வதனம். ஆபரணங்களின் நேர்த்தி. இலந்தைப் பழங்களைக் கோத்த மாதிரிபவழ மாலை. அன்பர்களுக்கும்பொருள் அருள் இரண்டையும் வாரி வழங்கும் கரங்களில் காப்பும் கொலுசும். திருச்செவியில் தோடு. மார்பில் தவழும் பதக்கங்கள். செங்கமலத் தாயார் மகாலக்ஷ்மியின் அவதாரமாகச் செந்தாமரைப் பொய்கையில் அவதரித்தவர். சர்வாலங்காரபூஷிதையாக இருப்பதில் வியப்பென்ன?

மன்னார்குடி தலத்துக்குப் பல பெயர்கள் வழங்குகின்றன. கோப்பிரளயர் கோபிலர்

என்ற இரண்டு முனிவர்கள் ஸ்ரீ கண்ண பிரானைத் தரிசித்தால் மோட்சம் கிடைக்கும் என்று துவாரகையைத் தேடிச் சென்றனர். நாரதர் எதிரில் வந்து ''சம்பகாரணிய க்ஷேத்திரத்தில் ஹரித்ரா நதிக் கரையில் ஒரு வருடம் தவம் செய்தால் கண்ணன் காட்சி தருவான்'' என்று கூற அவ்வாறே தவம் செய்தார்கள். அவர்களுடைய ஆசை தீர கண்ணன் முப்பது விதமான கோலத்தில் அவர்களுக்கு சேவை ஸாதித்தார். கடைசியாக ருக்மிணி சத்யபாமா ஸமேதனாக ஸ்ரீ ராஜகோபாலனாகக் காட்சி தந்தபோது மனம் பூரித்த ரிஷிகள் ''இந்தத் திருக்கோலத்திலேயே தாங்கள் இங்கே இருந்து கொண்டு பக்தர்களுக்குக் காட்சி தந்து கொண்டிருக்க வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்யக் கண்ணனும் இணங்கினார். இதனால் இந்தத் தலத்துக்குத் தென் துவாரகை என்ற பெயர் வழங்குகிறது.

பிரும்மாவும் அக்கினியும் பூஜித்த தலம். பிரும்ம தேவரே முன்னின்று உத்ஸவங்களை நடத்தியபடியால் பிரும்மோற்சவம் பதினெட்டு நாட்கள் நடைபெறுகிறது. ஸ்ரீ ராஜகோபாலன் நித்யோத்சவ யோக ஜாதகம் உடையவர். தினம் உத்சவம்தான்.

ராஜகோபால சுவாமிக்கு ஜலக்கிரீடை செய்த களைப்பு நீங்குவதற்காகச் சிவபெருமானே பால் காய்ச்சிக் கொடுத்தாராம். இன்னும் ஜெயங்கொண்டநாதர் ஆலயத்திலிருந்து பால் காய்ச்சி வருவது அரிய செய்தி.

சோழ விண்ணகரம் என்றும் பெயர் பெற்றது இந்த ஊர். ராஜாதி ராஜ சதுர்வேதி மங்கலம் என்ற பெயரும் கல்வெட்டுக்கள் ஒன்றில் காணப்படுவதால் நான்கு வேதங்களை ஓதி உணர்ந்த பெரியவர்கள் இந்த ஊரில் இருந்தார்கள் என்பது தெரிகிறது. இதற்குச் சான்றாக பிரும்மோத்சவ காலத்தில் நான்கு வேதங்களையும் ஓதும் வைஷ்ணவப் பெரியார்கள் இன்றும் இங்கே வந்து கூடுவதைப் பார்க்கலாம்.

உத்சவ காலங்களில் எத்தனையோ வடமொழி ஸ்லோகங்களைப் பாடிப் பூஜைகள் செய்வதோடு திவ்யப் பிரபந்தமும் பாடப்பெறுகிறது. பிரும்மோற்சவம் நடக்கும்போது 4000 திவ்யப் பிரபந்தப் பாடல்களையும் பாடியே ஆகவேண்டுமாம்.

ராஜாதி ராஜ விண்ணகரப் பெருமாள் தமிழ் உகந்த பெருமாளாகவும் விளங்குவதை எண்ணி உள்ளம் பூரிக்கிறோம்.

பாத தாமரைகள் நொந்திடப்
பார்தனில் என்னைத் தேடி வந்தவன்
மாதவன் மதுரை மைந்தன்
மறைகள் பரவும் மாயன் அவனோ?

படங்கள்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

# என்ன சொல்லி வாழ்த்துவது?

இந்த உலகம் எத்தனை வருஷங்களாக இருந்து வருகிறதென்று சந்திர மண்டலம் வரை சென்று வந்த விஞ்ஞானத்தினாலும் உலக சரித்திரப் பேராசிரியர்களாலும் மண், கல், செடி இவைகளை ஆராய்ச்சி செய்பவர்களாலும் உறுதியாகக் கூற முடியவில்லை.

ஏசு கிறிஸ்து பிறப்பை வைத்து, கிறிஸ்து பிறப்பதற்கு முன்–பின் என்று இரண்டாகப் பிரித்துக் காலத்தை வரையறுத்துச் சொல்கிறார்கள். அநேகமாக சரித்திர கால ஆராய்ச்சியாளர்கள் எல்லாருமே இந்த முறையையே கடைப்பிடித்து வருகிறார்கள்.



ஆனால் நமது இந்திய கலாச் சாரச் சாத்திரத்தின் படி புராண வரலாறுகளின்படி தினந்தோறும் நாம் ஒரு காரியம் செய்ய ஆரம்பிக்கு முன் சொல்லும் சங்கல்பத்தின் படி, உலகம் தோன்றியதன் வரலாறு, உலக விஸ்தீரணத்தின் நிலை, பொருள்கள் ஒவ்வொன்றும் எவ்வளவு காலமாக இருந்து வருகின்றன என்ற உண்மை உயிரினங்கள் எல்லாம் எவ்வளவு காலமாக இருந்துவருகின்றன என்றதத்துவங்களையெல்லாம் தெளிவாக விவரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

நம்முடைய வாழ்க்கையில் இருபத்து நான்கு மணி நேரம் ஒரு நாள் – ஏழு நாட்கள் கொண்டது ஒரு வாரம் – பதினைந்து நாட்கள் கொண்டது ஒரு பக்ஷம். அதில் அமாவாசை முதல் பவுர்ணமி வரை உள்ளது சுக்லபக்ஷம் அதாவது வளர்பிறை – பௌர்ணமி முதல் அமாவாசை வரை உள்ளது கிருஷ்ணபக்ஷம் அதாவது தேய்பிறை. இரண்டு பக்ஷங்கள் கொண்டது ஒரு மாதம். இரண்டு மாதங்கள் கொண்டது ஒரு ருது. அப்படி மூன்று ருதுக்கள் கொண்டது ஒரு அயனம். இதில் தை மாதம் முதல் ஆனி முடிய உள்ளது உத்தராயணம் – ஆடி முதல் மார்கழி முடிய உள்ளது தக்ஷிணாயனம். இரு அயனங்கள் சேர்ந்தது ஒரு வருஷம்.

நம்முடைய ஒரு வருஷம் தேவதைகளுக்கு ஒரு நாள். நம்முடைய ஒரு மாதம் பித்ருக்களுக்கு ஒரு நாள். அதனால் கிருஷ்ணபக்ஷம் பித்ருக்களுக்கு இரவாகவும், சுக்ல பக்ஷம் பகலாகவும் கருதப்படுகிறது. இதுபோலவே தேவதைகளுக்கு தக்ஷிணாயனம் இரவாகவும் உத்ராயணம் பகலாகவும் சொல்லப்படுகிறது. ஆகவேதான் கிருஷ்ணபக்ஷத்திலும் தக்ஷிணாயனத்திலும் விவாஹம் போன்ற மங்கள காரியங்கள் செய்ய மாட்டார்கள்.

மார்கழி மாதம் தேவதைகளுடைய சூர்யோதய காலம். ஆனதினால் மார்கழி மாதத்தில் பூஜை, பிரார்த்தனை, பஜனை முதலியவைகள் சிறப்பாகச் செய்யப்படுகின்றன. ஒவ்வொரு நாளும் சூரிய உதய காலத்தில் பூஜை – பஜனை – பிரார்த்தனை செய்வது மிகுந்த புண்ணியமான காரியம்.

இரவில் தூங்கி, எல்லா உறுப்புக்களும் மனம் உட்பட ஓய்வு பெறுகின்றன. நல்ல தூக்கத்தின்போது மனம் மிகவும் அமைதியாக இருக்கிறது. இந்த நிலை தூங்கி எழுந்த பிற்பாடும் கூடச் சிறிது நேரம் வரை நீடிக்கும். ஆகவேதான் காலையில் எழுந்தவுடன் மனம் தெளிவாக இருக்கும் பொழுது, இறை வழிபட வேண்டும் – இறைவன் நாமத்தை ஜபிக்க வேண்டும் – தியானம் செய்ய வேண்டும் என்றெல்லாம் வகுத்திருக்கிறார்கள்.

நம்முடைய ஒரு வருஷ காலமானது, தேவலோக இந்திராதி தேவதைகளுக்கு ஒரு நாள். தேவதைகளின் காலக் கணக்குப்படி 4,800 வருஷங்களைக் கொண்டது கிருதயுகமாகும். 3,600 வருஷங்கள் கொண்டது திரேதாயுகமாகும். 2,400 வருஷங்களைக் கொண்டது துவாபரயுகமாகும். 1,200 வருஷங்களைக் கொண்டது கலியுகமாகும். இவ்விதம் நான்கு யுகங்களும் ஒன்றன் பின் ஒன்றாக ஆயிரம் தடவைகள் வந்தால், அதுவே உலகம் படைக்கும் பிர்ம்மதேவனின் ஒரு பகல் காலமாகும். அதேபோல் நான்கு யுகங்களும் மறுபடியும் ஒன்றன் பின் ஒன்றாக ஆயிரம் தடவைகள் வந்தால் அது பிர்ம்மதேவனின் ஓர் இரவு காலமாகும். இப்படி நான்கு யுகங்களும் இரண்டாயிரம் தடவைகள் சுற்றி வந்தால் இது பிர்ம்மதேவனின் ஒரு நாளாகும்.

பிர்ம்ம தேவனின் பகல் காலத்தில் உலக சிருஷ்டியும் இரவுக்காலத்தில் பிரளயமும் உண்டாகின்றன. அந்தப் பிரளய காலத்தில் பூலோகம், புவர்லோகம், சுவர்க்கலோகம் என்று சொல்லப்படுகிற மூன்று லோகங்களும் அழிந்து விடுகின்றன. இந்தப் பிரளயம் பிர்ம்ம தேவனின் இரவு காலத்தின் நிமித்தம் ஏற்படுவதால் இதை ''நைமித்திக பிரளயம்'' என்பார்கள். பிறகு பிர்ம்ம

### உப்புமாவுக்கு மவுசு!

அண்டார்டிகாவில் உள்ள ஸ்குவா என்னும் கடல் பறவை தன் முக்கிய உணவான மீனைத் தவிர்த்துத் தென்னிந்திய சிற்றுண்டியான உப்புமாவை மிக ரசித்துச் சாப்பிட்டதாம். பொதுவாக அண்டார்ட்டிகா கடல் பறவைகள் மீனைத் தவிர்த்து எதையுமே சாப்பிடாதாம்.

தகவல்: பாத்திமுத்து சித்தீக

---

தேவனின் பகல் காலத்தில் பூலோகம்—புவர்லோகம், சுவர்க்க லோகம் ஆகிய லோகங்களின் சிருஷ்டி மாத்திரம் தொடங்குகிறது. மற்றெல்லா லோகங்களும் முன்போலவே இருக்கின்றன. பிர்ம்மதேவனின் ஒரு பகல் காலத்தை ஒரு கல்பம் என்று கூறுவர்.

இவ்விதம் பிர்ம்மதேவனின் ஒவ்வொரு பகலிலும் இரவிலும் சிருஷ்டியும் பிரளயமும் மாறி மாறி நடைபெற்று வருகின்றன. இந்தக் கணக்குப் பிரகாரம் பிரம்மதேவன் நூறு வருஷங்கள் இருப்பார்.

பிர்ம்மதேவனின் ஆயுளுக்கு 'பரம்' என்று சொல்வார்கள். 'பர அர்த்தம்' என்றால் பரத்தில் பாதி என்று பொருள். இவ்விதம் ஒரு பிர்ம்மதேவனின் ஆயுள் முடிந்தவுடன், மற்றொரு பிர்ம்மதேவன் உலகைப் படைக்கத் தோன்றுகிறார். இப்பொழுது உலகைப் படைத்துக் கொண்டிருக்கும் பிர்ம்மதேவனின் காலத்தில் பாதி கழிந்து விட்டது. அவர் ஆயுளின் இரண்டாவது பாதி நடந்து வருகிறது.

பிர்ம்ம தேவனுடைய படைப்பில் பதினான்கு உலகங்கள் இருக்கின்றன. அதில் நாம் வசிக்கும் உலகத்திற்குப் பூலோகம் என்று பெயர்.

பிரும்ம தேவனுக்கே ஆயுள் முடிவு உண்டெனில் அடுத்த படைப்புக் கடவுளையே படைத்திடுபவர் இறைவன். அடிமுடி காண முடியாது அப்பாலுக்கப்பாலாய் எங்கும் வியாபித்தவன். காலத்தை வென்றவன் அவன் ஒருவனே. அப்படிப்பட்டவன் நமது உள்ளத்துக்குள்ளிருந்து நம்மையும் ஆட்டிப் படைக்கிறானே என்ன விந்தை! இந்தக் கருணையை என்னவென்று கூறி வாழ்த்துவது!

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகியான்எனது என்றவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே!

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜயேந்திர சரஸ்வதி சங்கராசார்ய
சுவாமிகள்



### வாசகர் பேட்டி!

## கேள்வி கேட்டுத் திணற அடிக்கலாம்!

இவரிடம் நீங்கள் என்ன கேட்க விரும்புகிறீர்கள்? மேடையுள்ள வெற்றிடத்தில் ரசமான பதிலைப் பெறக் கூடிய சிறப்பான கேள்வி யொன்றை எழுதி அனுப்புங்கள். தர்மசங்கடத்தில் ஆழ்த்துவதாகவோ, திணற அடிப்பதாகவோ, இடக்காகவோ அல்லது சாதுவான கேள்வியாகவோ எப்படி வேணுமானாலும் இருக்கலாம். பிரசுரமாகும் ஒவ்வொரு கேள்விக்கும் ரூ. 25 பரிசு! அவற்றுக்குப் பதில் கூறுவதுடன் பிரசுரமாகும் கேள்விகளில் சிறந்த ஒன்றினை காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறனே தேர்ந்தெடுத்துத் தருவார். அதற்குச் சிறப்புப் பரிசு ரூ. 50!

**முடிவு தேதி: 9–5–83**

உறையின் மேல் ''வாசகர்பேட்டி'' என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

கேள்வி:

பெயர்:

விலாசம்:

கையொப்பம்:

# ரஜினியின் முதல் ஹிந்திப்படம்

## அந்தா காநூன்

ஆச்சரியம் நம்பர் ஒன்று: தமிழ் வசனங்களைக் குதறித் துப்பும் ரஜினி ஹிந்தியில் புரியும்படி அழகாகப் பேசியிருப்பது.

ஆ. நம்பர் இரண்டு: வெகு துடிப்பான அசைவுகளுடன் டிஷ்யூம் டிஷ்யூம் செய்கிற ரஜினி அடக்கி வாசித்து 'மூத்த' கலைஞர் அமிதாப்புக்கே விட்டுக் கொடுத்திருப்பது.

ஆ. நம்பர் மூன்று: ரஜினிக்கு இவ்வளவு நன்றாய் டான்ஸ் ஆட வருமா என்ன?

கதை? யாருக்கு வேண்டும்?

கண்ணெதிரே அப்பா கொலை. அப்புறம்... அதேதான். அந்த மூவரைப் பழி வாங்க ரஜினி வளர்கிறார். கூடவே அக்காவாய் ஹேமமாலினி. அக்கா சட்டத்தின் மூலமாய்ப் பழிவாங்க இன்ஸ்பெக்டராகிறார். ரஜினி சட்டத்தைத் தன் பாக்கெட்டில் போட்டுக் கொள்கிறார்.

ட்ர்ர்ர் என்று ரஜினி மோட்டார் சைக்கிளில் ஆரோகணித்து ஹிந்தியில் பிரவேசிக்கிறார். அப்புறம் அவர் நின்றால் கைதட்டல். நடந்தால் கரகோஷம். 'மா' என்று ஒற்றை வார்த்தை பேசினால் விசில் பாராட்டு.

மறைவாய் டேப்பை ஓடவிட்டு மகா சாமார்த்தியமாய் ரஜினியிடம் கொலைகளுக்கான வாக்குமூலத்தை வாங்கி, உடன் இன்னொரு இன்ஸ்பெக்டரை வரவழைத்து அந்த டேப்பை ஓட விடுகிறபோது, ரஜினியின் குரல் வரவேண்டிய இடத்தில் ஏதோ ஒரு பாட்டு கும்மாளமாய் வெளி வருகையில் ஹேமமாலினியின் தவிப்பைப் பார்த்து 'குபுக்' சிரிப்பை அடக்கிக் கொள்கிற ரஜினி நம்ப ஊர் சிவாஜி ரஜினி.

அமிதாப், அகலக் கண் மாதவி, மழலையில் பாடி ஜெயில் கம்பிகளையும் உருக்குகிற அந்தக் குழந்தை — இவர்களைச் சுற்றிப் பின்னப்பட்ட அந்தச் சோகமான கிளைக் கதை ஒரு புள்ளி பிசகாத ஓவியம்.

நட்ட நடு நீதி மன்றத்தில் சதக் சதக் கென்று பச்சையாய்க் கொலையைச் செய்து விட்டு, 'இந்த மிருகத்தைக் கொன்றதற்கான தண்டனையை நான் ஏற்கனவே அனுபவித்தவன் — ஒரு கொலைக்கு உங்கள் நீதி மன்றம் இரண்டு தடவைகள் தண்டிக்குமா?' என்று உருமுகிறாரே அமிதாப் — வசனம் யார் என்று புருவம் உயர்கிறது. உயர்த்துபவர் ரஹி மஸூம் ரேஸா.

ஹிந்தியில் எப்போதுமே நல்ல நகைச்சுவைக்குப் பஞ்சம். இதிலும் அப்படித்தான். லக்ஷ்மிகாந்த் பியாரேலால் இசையில் ஆறு பாடல்கள். ரசிக்கிற மாதிரி மூன்று. சிகரெட் பிடிக்க, பாத்ரூம் போக, கோன் ஐஸ் சாப்பிட என்று மூன்று.

ஒன்றை ஒப்புக் கொண்டாக வேண்டும். படம் வெற்றி பெற்றால் ரஜினியாலா, அமிதாபாலா என்று இனம் கண்டு பிடிக்க முடியாதபடிக்கு வெகு சாமர்த்தியமாய்ப் படம் பண்ணியிருக்கிறார் டைரக்டர் ராமா ராவ்.

முதல் பாதி ஜவ்வு மிட்டாய். — எவ்வளவு தித்திப்பாய் இருந்தாலும் இழுக்கிறது. பின் பாதி ஊசி மிளகாய் பஜ்ஜி. — கண்ணில் நீரை வரவழைத்தாலும் இன்னும் இன்னும் என்று கேட்கச் சொல்கிறது.

கொசுறு: ரீனாராயும் இருக்கிறார். ப்ரான், ப்ரேம் சோப்ரா, டானி ஆகிய பெரிய நடிகர்களும் வேலை இல்லாமல் பல் குத்துகிறார்கள்.

பிரசாத்தின் காமிரா ஓ. கே.

ஆமாம், மூச்சே விடாமல் இரண்டு படம் வெளியாகியிருக்கிறதே — என்ன சமாச்சாரம்?

ஜெய மன்மதன்





விண்வெளி
(ஆட்சிபீடம்)
ரோகிணி
(ராஜீவ்)
எஸ்.எல்.வி-3
(இ.காங்)






எத்தனை நாளைக்கு அதைக் கட்டிக்கிட்டு அழப்போறே?.. ரெண்டாந்தாரமா கட்டிக்க இந்தப் பொண்ணை இட்டாந்திருக்கேன், பாரு!
திருச்சி
தண்ணீர்ப் பஞ்சம்
மின்சாரப் பஞ்சம்
தமிழ் தாய்
சென்னை
இட நெருக்கடி

கல்கி

1983 ஏப்ரல் 24
ருத்ரோத்காரி சித்திரை 11
மலர் : 41 இதழ் : 39





# பாக்கியசாலி தமிழன்!

தமிழனுக்கு இந்தத் தண்ணீர்க் கஷ்டம் ஏற்பட்டதே ஒருவிதத்தில் நல்லதாயிற்று. இல்லாது போனால் தான் எப்பேர்ப்பட்ட அதிர்ஷ்டசாலி என்பது அவனுக்குத் தெரியாமலே போயிருக்கும். பாருங்களேன், அவனிடம் பிரதமரே கருணை கொண்டு, ''ஆதிமூலமே'' என்று இவன் அழைக்கக் கூடக் காத்திராமல் டில்லியிலிருந்து பறந்து வந்தார். ஹெலிகாப்டரில் ஒரு சுற்றுச் சுற்றி ஆறே மணி நேரத்தில் இங்குள்ள வறட்சி நிலையைப் புரிந்து கொண்டு விட்டார். அதற்குச் சில தினங்கள் முன்பு தான் மத்திய அரசின் வறட்சி ஆய்வுக்குழு வந்து போயிருந்தது என்றாலும் பிரதமர் தாமே பார்த்தறிவதற்கு ஈடாகுமா? பம்ப் அடித்தார் பிரதமர். புகைப்படம் நாளிதழ்களில் பிரசுரமாயிற்று. தமிழன் ஒவ்வொருவனும் தன் வீட்டிலேயே பிரதமர் பம்ப் அடிக்கத் தண்ணீர் கொட்டோ கொட்டென்று கொட்டியது போல் மகிழ்ந்தான்!

பிரதமருடன் போட்டி போட்டுக் கொண்டு ரத்தத்தின் ரத்தங்கள் தமிழனிடம் தமக்குள்ள பரிவைப் பறைசாற்ற ஏப்ரல் 3-ம் தேதி மாபெரும் சைக்கிள் ஊர்வலம் நடத்தினர். ''பச்சிளங் குழந்தை வயிறு குளிருது.. மத்திய அரசே உனக்கேன் வயிறு எரியுது?'' என்ற கோஷத்தைக் கேட்டே தமிழன் வயிறும் மனமும் நிரம்பித் தாகமும் தீர்ந்து போயிற்று. அரிசிப்பஞ்சம், தண்ணீர் கஷ்டம், கெரசின் தட்டுப்பாடு, விலைவாசி உயர்வு போன்ற சகல இன்னல்களும் இருந்த இடம் தெரியாமல் ஓடி மறைய மனம் குளிர்ந்தான்!

தமிழன் மகிழ்ச்சி இத்துடன் முடிந்து போக சிவாஜி ரசிகர் மன்றம் அனுமதிக்க மறுத்தது. அவர்களும் தமிழன்பால் தமக்குள்ள பேரன்பைப் புலப்படுத்த ஊர்வலம் புறப்பட்டார்கள். அப்படிக் கிளம்பியவர்களை ஜனநாயகப் பற்று மிக்கத் தமிழக அரசின் காருண்ய போலீஸார் குண்டாந்தடியால் அடித்து நொறுக்கி ஒரு குட்டி ஜாலியன் வாலாபாக் சிருஷ்டித்தார்கள். எல்லாம் தமிழன் மீதுள்ள அபிமானத்தினால்தான்!

தமிழனுடைய அதிர்ஷ்டச்சக்கரம் மறுபடி சுழன்றது. கிருஷ்ணா நதி நீரைச் சுமந்து கொண்டு ஏராளமான ரயில்வே வாகன்கள் சென்னை வந்து சேர்ந்தன. கூடவே ரயில்வே அமைச்சரும் பாதுகாப்பு அமைச்சரும் பறந்தோடி வந்தார்கள். தமிழக அமைச்சர்கள் யாருக்கும் அழைப்புத் தராமலேயே தமிழனுக்குத் தண்ணீர் திறந்துவிட்டு விழா நடத்தினார்கள். ஒரு வாகன் தண்ணீர் காலியாகப் பத்து மணி நேரம் ஆகுமே, எல்லா வாகன்களையும் சேர்ந்தாற்போல் காலி செய்யத் தக்க முன்னேற்பாடுகளை முதலில் செய்து கொண்டு பிறகு தண்ணீர் ஸ்பெஷல் விடுவோம் என்று யோசித்தார்களில்லை. அப்படிச் செய்தால் ரகசியம் வெளிப்பட்டுத் தண்ணீர் வழங்கும் அம்மையார் பெருமையில் மாநில முதல்வரும் பங்குக்கு வந்து விடலாமல்லவா? அப்புறம் தமிழன் யாருக்கு நன்றி கூறுவது என்று புரியாமல் குழப்பமடைவானே! இதைத் தவிர்த்துத் தமிழனை ரட்சிக்க, 'ரயிலை ஓட விட்ட பிறகு கைகாட்டியை இறக்கினால் ஆச்சு' என்ற ரீதியில் சாமர்த்தியமாகச் செயல்பட்டார்கள்.

ஏப்ரல் 7-ல் சிவாஜி ரசிகர் மன்றத்தைச் சேர்ந்த ஐயாயிரம் பேர்களைக் கைது செய்து சிறையில் தள்ளிய தமிழக அரசு ஏப்ரல் 9-ல் ரத்தத்தின் ரத்தங்கள் மறுபடி ஊர்வலம் போகத் தீர்மானித்ததும் அவர்களுக்கு ஸ்பெஷல் பஸ் விட்டு, வசதி செய்து தந்து அண்ணாயிஸ சிறப்பு ஜனநாயகத்தை நிலைநாட்டியது. ''சிலுக்கு இந்திரா ஒழிக'' கோஷங்கள் விண்ணளாவின. தமிழன் பெருமை கொடி கட்டிப் பறந்தது!

இப்படி எல்லாத் தரப்பினரது கரிசனத்தையும் பெற என்ன பாக்கியம் செய்தோமோ என்று தமிழன் பூரித்துப் போயிருக்கிறான்!

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# நேசமுள்ள வான்சுடரே

## சவீதா

## 2

மூடவன் கால்களுக்காகக் கெஞ்சிய போது இறைவன் சிறகுகளையே வழங்கியதைப் போல, பத்மா ஒரு பி. எஸ்ஸி பட்டத்துக்காக ஏங்கத் தொடங்கிய நேரத்தில் மருத்துவம் படிக்கும் மகத்தான வாய்ப்பு அவளைத் தேடி வந்தது.

இன்ப துன்பங்களைப் புரிந்துகொண்டு துய்க்கவும், துக்கப்படவும் தெரியாத பிஞ்சுப் பிராயத்தில் அவளுடைய ஆரம்ப அத்தியாயம் முடிவு பெற்று விட்டது.

மதுரைக்குப் பக்கத்தில் இருக்கும், கிராமத்திலும் சேராத, நகரத்திலும் சேராத ஒரு ஊரில் பத்மா அவதரித்தாள். தேசிய நெடுஞ்சாலை அவ்வூரை இரண்டாக வகிர்ந்து கொண்டு ஓடியது. அவித்த நெல்லை உலர்த்த அந்த நெடுஞ்சாலை மிகவும் பயன்பட்டது. ரோஜாத் தோட்டங்களில் அதிகாலை மூன்று மணிக்கே விரியப் போகும் மொட்டுக்களைச் சேகரித்தார்கள். எருமை நெய்யும் வரட்டியும் கேட்பாரற்றுச் சீரழிந்தன.

பசும்பொன் தெருவின் மேற்குக் கோடியில், மாப்பிள்ளை விநாயகர் கோவிலை விட்டுச் சற்று விலகியிருக்கும் ஒட்டு வீட்டில் பத்மா மூன்றுமாதக் குழந்தையாகக் காலை நேரத்தில் தவழ்ந்து, சிமெண்ட் தரையைத் தொட்டு ருசி பார்த்துக் கொண்டிருந்தாள். முற்றத்தில் சங்கு ஊளையிட ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் ஒரு டாக்சி வந்து நின்றது.

மதுரை எர்ஸ்கின் மருத்துவ மனையின் போஸ்ட் ஆபரேட்டிவ் வார்டில் காலமான பத்மாவின் அம்மாவின் உடலை மூன்று பேர் சேர்ந்து வீட்டுக்குள் தூக்கிக் கொண்டு வந்தனர். தயாராகப் போடப்பட்டிருந்த பெஞ்சின் மேல் கிடத்தினர். உறவினர்கள் குடும்ப சமேதராய் எழுந்தருளினர். பெண்கள் ஒப்பாரி வைத்தனர். மறுநாள் பாலைத் தெளித்து விட்டு உற்சாக அரட்டைக்குப் பிறகு ஒருவர் பின் ஒருவராக நழுவினர்.

தனித்து நின்ற அப்பா எந்தக் கவலையுமில்லாமல் தவழ்ந்து கொண்டிருந்த பத்மாவைத் தூக்கி எடுத்தார். முகத்துக்கு எதிரே ஏந்திக் கொண்டு, ''என் உயிரை அநியாயமாக எங்கிட்டேயிருந்து பிரிச்சுட்டயே பாவி, பெத்த தாயை ஈவிரக்கமில்லாம நெருப்பிலே போட்டுக் கொளுத்திட்டயே, அம்மா இல்லாம இந்த உலகத்திலே நீ எப்படி வளர்ந்து ஆளாகப் போறே சொல்லு'' என்று வாய் விட்டுப் புலம்பினர்.

பத்மா உடனே கன்னங்களில் குழி விழச் சிரித்தாள். சின்னக் கரத்தை அவருடைய மூக்குக் கண்ணாடியின் மீது வீசி, பூ விரலால் அதை இறுகப் பற்றி அசைத்து இழுத்தாள். கண்ணாடி கீழே விழுந்தது. இடப் பக்கக் கண்ணாடி பிரேமிலிருந்து விடுதலை பெற்றுத் தரையில் சிதறியது.

பத்மா நாலாவதில் தேறினாள். ஐந்தாவது செல்வதற்கு முன் கோடை விடுமுறை வந்தது. மறுபடியும் அவள் வீட்டு முற்றத்தில் சங்குச் சப்தம். அப்புறம் அதே உறவினர் அதே நெரிசல். அதே கண்ணீர். பெண்களின் 'குய்யோ முறையோ' வென்ற கூப்பாடு.

சீட்டித் துணியில் பாவாடை சட்டையணிந்து ஒல்லியாக வளர்ந்து நின்ற பத்மா, அப்பாவின்



அசைவற்றுக்கிடந்த வலக்கரத்தை, அதில் பச்சை குத்தப்பட்டிருந்த தாமரைப் பூவைப் பார்த்துப் பார்த்துத் தேம்பினாள்.

அப்பாவின் இறுதி ஊர்வலம் பகம்பொன் தெருவில் நகர்ந்தது. அவளுடைய வாழ்க்கையின் இரண்டாவது அத்தியாயம் அந்த வி...வில் முற்றுப் பெற்றது.

நாலைந்து தினங்களுக்குப் பிறகு சென்னைக்குக் கிளம்பிய துரித ரயிலில், ஜன்னல் ஓரமாக பெற்றோரை இழந்த சிறுமி பத்மா நின்றாள். வட்டமடித்துப் பின் வாங்கிய வயல் வெளிகளையும் கண்மாய்களையும் வெற்றுப் பார்வையால் பார்த்தாள்.

'பத்மா, பத்மா!' என்று அப்பா வீட்டுக் கூடத்தில் நின்று கூவிய சப்தம் அவளுக்கு இன்னும் கேட்டுக் கொண்டே இருந்தது. அவருடைய வலக்கரத்தில் இருந்த பச்சைத் தாமரைப்பூ அவள் விழிகளின் எதிரே நின்றது.

பள்ளி விட்டதும் கையில் பஞ்சு மிட்டாயுடன் குஷியாக அப்பா சைக்கிளின் முன் பக்கத்தில் ஏறி அமர்ந்து வீடு திரும்பியது. மாரியம்மன் திருவிழாவில் வண்ண வண்ணப் பலூன்களுடன் அவர் மடியில் உட்கார்ந்து ராட்சச ராட்டினத்தில் தலை கிறுகிறுக்கும் வரை சுழன்றது. அவருடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு ரயில் வருகிறதா இல்லையா என்றுகூடக் கவலைப் படாமல் துள்ளிக் குதித்தோடி இருப்புப் பாதையைக் கடந்து தோட்டத்துக்குள் நுழைந்து ரோஜாக் குவியலிலிருந்து மனம் போலப் பூக்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டது...

பத்மாவின் பஞ்சு நெஞ்சு கனத்தது. பக்கத்தில் அமர்ந்திருந்த சிற்றப்பா தியாகராஜன் தொழில் நுணுக்கத்தோடு மாம்பழத் தோலை ஸ்பிரிங் போலச் சீவி எடுத்தார். ரயில் பெட்டியின் ஜன்னலுக்கு வெளியே வீசினார்.



கரி விழுந்ததால் பத்மா விழிகளைக் கசக்கிக் கொண்டு தன் இருக்கைக்கு வந்து அமர்ந்தாள். சித்தியின் வாய்க்குள் மாம்பழத் துண்டங்கள் ஓசை எழுப்பாமல் வரிசையாக வழுக்கிக் கொண்டு சென்று மறைந்ததை ஆச்சரியத்துடன் ரசித்தாள். உடனே சித்தி பெருந்தன்மையுடன் வெள்ளரிப் பிஞ்சில் ஒரு துண்டு ஒடித்துக் கொடுத்தாள். ஒழுகிய மூக்கைப் பத்மா தோள் பட்டையில் தேய்த்து விட்டுச் சித்தி நீட்டியதை வாங்கிக் கொண்டாள்.

சித்தியும் சித்தப்பாவும் ஒரே மாதிரியாக அகலமாக இருந்தார்கள். சித்தியின் முகத்தில் தோடு அடிக்கடி சுடர் வெட்டியது. அவள் கறுப்பாக இருந்த போதிலும் முகத்தில் களை அமோகம். நெற்றிக்கு நாலணாவை விடப் பெரிதாக இட்டிருந்தாள்.

தியாகராஜன் சிவப்பாக இருந்தார். தலையில் இளம் வழுக்கை.

அவர் சிரித்த சமயங்களில் மேல் வரிசையில் இடது, வலது 'மோலார்' பற்கள் கோலார் தங்கத்தில் பளபளத்தன. கீழ் வரிசையில் சின்னக் கணவாய் தங்கத்துக்காகத் தவமிருந்தது. முகத்தில் முக்கால் வாசிப் பரப்பை அடைத்துக் கொண்டிருந்த மூக்கும், தவளையை நினைவூட்டும் முட்டைக் கண்களும் அவரை ஒரு கார்ட்டூன் கதாபாத்திரமாகப் பத்மாவுக்கு அறிமுகம் செய்தன.

தியாகராஜனும் அவரது மனைவியும் எந்த வகையில் தனக்கு உறவு என்று பத்மாவுக்குத் தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவளுக்குத் தோன்றவுமில்லை. அப்பா இறந்த வீட்டில் எல்லா உறவினரின் முன்னிலையிலும் நாலைந்து கிழங்கள் கூடிப் பேசி முடிவெடுத்த பிரகாரம் பத்மா அவர்களைச் சிற்றப்பா—சித்தியாக ஏற்றுக் கொண்டாள்.

சென்னையின் ஆயிரம்விளக்கு பத்மாவுக்கு விசாலமாகத் தோன்றியது. சித்தி வீட்டில் குழந்தையும் வேலைக்காரியும் இல்லாத குறைகளைப் பத்மா ஏககாலத்தில் போக்கினாள்.

முற்றம் பெருக்குவதிலிருந்து துணி துவைத்து மாவரைப்பது வரை சகல வேலைகளையும் அதிகாலை நாலரை மணியிலிருந்து எட்டரைக்குள் சுறுசுறுப்பாக முடித்துவிட்டுச் சிற்றப்பா வேலை பார்த்த நடுநிலைப் பள்ளிக்கு விரைந்து ஆறாவது படித்தாள்.

சிற்றப்பா மாநகராட்சி அலுவலகத்திலுள்ள காதர்பாட்சாவுக்கு மாமூல் அவ்வப்போது வெட்டிக்கொண்டு ஒரே பள்ளியை விட்டு அசையாமல், தலைமை ஆசிரியர் நாற்காலியை ஆறேழு வருடங்களாகத் தேய்த்துக் கொண்டிருந்தார்.

புகுமுக வகுப்புத் தேர்வைப் பத்மா எழுதி முடித்த மறுநாள் சித்தி பல வருடங்களாகக் காத்திருந்தவளைப்போல ''படிச்சதுபோதும்'' என்றாள்.

பத்மா திடுக்கிட்டுத் திரும்பினாள்.

''போயி எம்ப்ளாய்மென்ட் ஆபீஸ்ல பதிஞ்சுட்டு வா''

''ரிசல்ட் வருமுன்னே பதிய முடியாது சித்தி. மார்க் லிஸ்ட்டையும் எடுத்துக்கிட்டுப் போனாத்தான் பதிய முடியும்.''

தேர்வு முடிவுகள் வெளிவந்தன. பத்மா மாநிலத்திலேயே முதல் மாணவியாக அதிக மதிப்பெண்களுடன் வெற்றி வாகை சூடினாள்.

பாலம் வார இதழ் வழங்கிய இரண்டாயிரம் ரூபாய் பரிசையும் பெற்றாள். 'இவ்வாண்டின் சிறந்த மாணவி' என்று பத்மாவின் முகத்தை ஒரு இதழின் அட்டையில் வண்ணப் படமாக வெளியிட்டார்கள்.

சிற்றப்பா பரிசுத் தொகையை எண்ணி வாங்கிக் கொண்டார். ''டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கத்துக்கோ'' என்றார்.

''ஒரு டிகிரி வாங்கினாத்தான் நல்ல வேலையாகக் கிடைக்கும் சித்தப்பா, சம்பளமும் நிறையக் கிடைக்கும்.''

''இன்னும் மூணு வருஷம் படிக்கணுங்கறியா?'' என்று உரத்த குரலில் கேட்டார்.

ஓடிவந்த சித்தி, ''பணம் யார் வீட்ல கொட்டிக் கிடக்குன்னு நினைச்சே? காலாகாலத்தில் ஒரு வேலையைப் பார்ப்போம், கல்யாணத்துக்குப் பணத்தைச் சேர்ப்



## விவசாய நண்பன்!

பம்பாயில் உள்ள பி.பி.பி.எம். ஆராய்ச்சி நிறுவனம் புதிதாக கிருஷி மித்ரா (விவசாய நண்பன்) என்னும் வண்டியை அமைத்துள்ளது. நிலத்தை உழ, பாத்தி கட்ட, விதை விதைக்க, அறுவடை செய்ய, மருந்துதெளிக்க தண்ணீர் இறைக்க, புல் அறுக்க எனப் பல வகையில் இந்த மெஷின் வண்டியை உபயோகிக்கலாம். 1000 கிலோ எடை வரை விவசாயப் பொருள்களையும் மனிதர்களையும் ஏற்றிச் செல்லவும் முடியும். மணிக்கு 15 கி. மீ. ஓடி, ஒரு நாளைக்கு ஐந்து ஹெக்டேர் நிலத்தை உழக்கூடிய இதன் விலை பதினேழாயிரம் ரூபாய்.

—உஷா சுப்பிரமணியம்

# ஒரு இல்லத்தரசியின் பொறுப்புக்களை மதிப்பது போலவே அவரின் கனவுகளையும் நாங்கள் ப்ரியத்துடன் உணர்கிறோம்...

கனவாய் நிழலிட்டவை கைகளில் நிஜமாய்ப் பொலிய எங்களது ரிக்கரிங் டிபாசிட் திட்டம் பெரிதும் உதவுகிறது. மாதாமாதம் நீங்கள் சேமிக்கிற 100/- ரூபாய் ஒரே ஆண்டில் 1253/- ரூபாயாகக் கிடைக்கிறது.



கனவுகளிலிருந்து நிஜத்திற்கு யதார்த்தமான வழிமுறைகள் வழங்கும்

**பாங்க் ஆப் தமிழ்நாடு லிட்.,**

(ஒரு ஷெட்யூல்ட் பாங்க், ஸ்தாபிதம் 1903)

62, கீழரத வீதி, திருநெல்வேலி டவுன்.

EP-BT-103-82

**உங்களுக்காகவே நாங்கள்**

போம்னு இல்லாம படிக்கப் போறுளாம் படிக்க.''

சித்தப்பா தன் கையில் இருந்த பணத்தைப் பார்த்துவிட்டு அவசர அவசரமாகப் பீரோவைத் திறந்து உள்ளே வைத்து இறுகச் சாத்திப் பூட்டிஞர். சாவியைச் சட்டைப் பையின் உள் பாக்கெட்டுக்குள் பதுக்கிக் கொண்டார்.

''பணத்துக்காக நீங்க கவலைப்பட வேண்டாம் சித்தப்பா.''

இருவரும் ஆச்சரியத்தோடு திரும்பினர். சித்தப்பா, ''படிக்கிறதுக்குப் பணம் வேணுமா!'' என்ருர்.

''ஆமா சித்தப்பா. நேத்து மிஸ் லாவண்யாகிட்ட பேசினேன்.''

''யாரு லாவண்யா?''

''பாலம் வீக்லிக்கு அவங்கதான் புது எடிட்டர்.''

''என்ன சொன்ருங்க?''

''பாலம் பத்திரிகை நான் என்ன படிச்சாலும், எவ்வளவு படிச்சாலும் என் படிப்புச் செலவுகளை ஏத்துக்கும்னு.''

**ஃபோ**ரென்ஸிக் துறையைப் பத்மாவும் டெய்சியும் கடந்தனர். – வெள்ளைக் கோட், கன்னிங்ஹாம்ஸ் பிராக்டிகல் மான்யுவல் ஆஃப் அனடமி, டிஸெக்ஷன் பாக்ஸ் சகிதமாக.

காலை வெய்யில் அவர்கள் முகத்துக்கு இதமாக இருந்தது. சீருடை போல இருவரும் கனகாம்பர நிறப் புடவையும் ப்ளவுசும் அணிந்திருந்தனர்.

பத்மாவின் விழிகள் எல்லாத் திசைகளிலும் ராம்குமாரைத் தேடின. கும்பல் கும்பலாக எல்லாரும் வந்தனர். ஒருவருக்கொருவர் உற்சாகமாகக் கையசைத்துப் பக்கத்தில் வந்ததும் கை குலுக்கிக் கொண்டனர். ஹாய், ஹவ் ஆர் யு, மார்னிங் யார், ஃபைன்டா போன்றவைகளைச் சிரிப்பொலிகளுடன் பரிமாறிக் கொண்டனர்.

பைக் சப்தம் கேட்டபோதெல்லாம் பத்மா திரும்பித் திரும்பிப் பார்த்தாள்.

''ஏன்டி வேகமாக நடக்க மாட்டேங்கறே? நேரமாயிருச்சு நாமதான் கடைசி.''

கல்லூரியின் ஒதுக்குப்புறத்தில் இருந்த அனடமித் துறையை நோக்கி நடந்தனர்.

''ராம்குமார் படிப்பை ஒருவேளை நிறுத்திவிட்டு பிஸினஸ்ல இறங்கினலும் இறங்கிடுவான். எஸ்டேட் ஓனர். நீயும் படிப்பை நிறுத்திடுவியா?'' என்று டெய்சி பத்மாவைச் சீண்டி வேடிக்கை பார்த்தாள்.

பத்மா, ''விளையாட்டுக்குக் கூட அப்படியெல்லாம் சொல்லாதேடீ. ஹார்ட்டே நின்னுரும் போல இருக்கு'' என்ருள்.

டிஸெக்ஷன் ஹால் நெருங்கிக்கொண்டு வந்தது.

மேஜைகளின் மீது பரிசோதனைகளுக்காகக் கிடத்தப்பட்டிருந்த மனித உடல்கள் ஜன்னல்களின் வழியாகத் தெரிந்தன.

(தொடரும்)



ஒருவர்: பத்திரிகை ஆபீஸிலிருந்து உங்களை ''நூருண்டு காலம் வாழ்க'' என்று வாழ்த்தி வாழ்த்து வந்ததாகச் சொன்னீங்களே! அப்படி என்ன அனுப்பியிருந்தீங்க?

எழுத்தாளர்: நான் இறந்த பின் என் கதைகளைப் பிரசுரிக்கவும்னு எழுதியிருந்தேன்!

—ஆர். சுப்பு



அவன்: உன் காதலிக்கு எப்பவும் தினி விலேதான் ஞாபகம்னு எப்படிச் சொல்றே?

இவன்: நான் ஆசையாய் பௌர்ணமி நிலாவைக் காட்டி இதைப் பார்த்தா உனக்கு என்ன தோணுதுன்னு கேட்டால்... அவளுக்கு சூர்க்கா பவன் தோசைதான் ஞாபகம் வந்ததாம்!

—எம். சுரேஷ்ராஜா

# வாடகை வசந்தம்

[காதலியை நேசிக்கிற —
ஆனால் காதலை நேசிக்க முடியாத
ஒரு வேலையில்லாப் பட்டதாரி
இளைஞனின் அன்றாட
முனகல்கள்.]



விடிந்தது; விழிகள் மட்டும்
வெளுக்கவே இல்லை; கங்குல்

வடிந்தது; கண்ணில் தூக்கம்
வற்றவே இல்லை; அக்கா

அடித்துத்தான் பார்த்தாள் நானும்
அசைவதாய் இல்லை; அம்மா

அடிக்கடி கத்திப் பார்த்தாள்
அவளுக்கும் சக்தி இல்லை.

எழுந்துநான் அமர்ந்தால் மட்டும்
என்னதான் நடக்கும்; பேப்பர்

விழுந்துநான் படித்து மென்ன
வேலையா கிடைக்கும்; சேற்றில்

அழுந்திய எருமை போல்நான்
ஆகினேன்; எதிர்த்த வீட்டுக்

கொழுந்துநீ இல்லை யென்றால்
குடுமிநான் வளர்த்தி ருப்பேன்.

மாலையின் மகளே! என்னை
மௌனத்தால் ஆத ரித்தாய்

பாலையின் மணலில் நானும்
பனித்துளி சேக ரித்தேன்

ஆலையில் பூவாய் இங்கே
அகப்பட்டுக் கொண்டே னம்மா!

காலையில் பொழு தெனக்குக்
கறுப்பாக விடியு தம்மா!

என்னடா வாழ்க்கை என்றே
இருதயம் நொறுங்கிப் போனேன்.

என்னையே மௌனச் சேற்றில்
இறக்கினேன்; அந்த நேரம்

கண்ணிலே ருசிவ ளர்க்கும்
கனவுகள் தந்தாய்; நெஞ்சில்

சின்னதாய்ச் சுகம்வ ளர்த்தாய்
சிறகுகள் முளைக்க வைத்தாய்.

சிரசாலே நடத்தும் வேலை
சீக்கிரம் கிடைக்கா தென்றே

அறிவுக்குத் தெரியும்; ஆனால்
அட்டையைப் புதுப்பிக் கின்றேன்

விறகுக்கு நீரை வார்த்து
விடுகிறேன் துளிர்க்கு மென்று

பிறகென்ன கண்ணே ஈது
பிணத்துக்கு ரத்த தானம்!

விழிப்பதும் எல்லா ரேனும்
குளிப்பதும்; முகத்தை லேசாய்

மழிப்பதும்; சட்டை மாட்டி
வருவதும் உனக்கா கத்தான்!

ஒழுங்காக உன்னை யழைத்தே
ஊர்வலம் போவ தற்கு

வழியில்லை என்ற போதும்
வாஒரு வழிய மைப்போம்.

**வைரமுத்து பக்கம்**

# கள்வனின் காதலி

## அமரர் கல்கி

### அத்தியாயம் 53

### கல்யாணியின் கல்யாணம்

நிர்மலமான வானத்தில் பூரண சந்திரன் பவனி வந்து கொண்டிருந்தது. கீழே அலைகளின்றி அமைதியாயிருந்த நீலக் கடலைக் கிழித்துக் கொண்டு நீராவிக் கப்பல் அதி வேகமாய்ச் சென்றது. அந்தக்கப்பலின் மேல்தளத்தில் ஓர் ஓரமாகக் கம்பியின் மீது சாய்ந்து கொண்டு முத்தையனும் கல்யாணியும் நின்றார்கள். முத்தையன், கல்யாணியின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். "'மதி வதனம்' என்று சொல்கிறார்களே, அது எவ்வளவு அறிவீனம்? இரண்டும் வட்ட வடிவமாய் இருக்கின்றன என்பதைத் தவிர இந்த முகத்துக்கும் சந்திரனுக்கும் வேறு என்ன பொருத்தம் இருக்கிறது? அந்தச் சந்திர வட்டத்தில் கரு விழிகள் இரண்டு உண்டா? அவை நம்மைக் கொன்று விடுவது போல் பார்ப்பது உண்டா? ஒரு கண நேரத்துப் புன்னகையினால் பித்தம் தலைக்கேறச் செய்யும் சக்திதான் சந்திரனிடம் இருக்கிறதா?" என்று அவன் எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். திடீரென்று அவனுடைய மனத்தில் மிகவும் விசித்திரமான ஓர் எண்ணம் உண்டாயிற்று. "கல்யாணியின் கண்களிலிருந்து இப்போது கண்ணீர் பெருகினால் எப்படி இருக்கும்? நிலவின் ஒளி அந்தக் கண்ணீர்த் துளிகளின்மீது படும் போது, அவை முத்து உதிர்வதுபோல் உதிருமல்லவா?" என்று நினைத்தான். அப்படி நினைத்ததுதான் தாமதம்.— ஐயோ! இதென்ன? அந்தக் கரும் விழிகளிலிருந்து உண்மையிலேயே கண்ணீர் பெருகி வழிகின்றதே!

முத்தையன் பதறிப் போய், "கல்யாணி! கல்யாணி! என்ன இது? கண்ணீர் ஏன்?" என்று சொல்லிக் கண்களைத் துடைப்பதற்காக அருகில் நெருங்கினான்.

ஆனால் கல்யாணி சடக்கென்று ஓர் அடி பின்வாங்கினாள். "ஏன் என்று எனக்கே தெரியவில்லை. ஆனந்தக் கண்ணீர் என்று சொல்கிறார்களே, அது தானோ என்னமோ? அளவில்லாத ஆனந்தத்திலேதான் மூழ்கி இருக்கிறேன். ஆனால், ஆனால்..." என்று மேலே சொல்வதற்குத் தயங்கினாள்.

"ஆனால் என்ன? அவ்வளவு சொத்துச் சுதந்திரங்களையும் விட்டு விட்டு இந்தத் திருடனை நம்பி வந்தோமே என்று தோன்றுகிறதா?...."

"அதெல்லாம் இல்லை என்று உனக்கே தெரியும். முத்தையா! சொத்தும் சுதந்திரமும் இங்கே யாருக்கு வேணும், நீ திருடன் என்றால் இந்த உலகத்தில் யோக்யர்கள் யாருமே இல்லை. ஆனால், ஆனால்... நான் கேள்விப்பட்ட ஒரு விஷயம்தான் என் மனத்தில் உறுத்திக் கொண்டிருக்கிறது. உனக்கு இன்னொரு ஸ்திரீயிடம் நேசம் உண்டு என்று சொன்னார்கள். நான் நம்பவில்லை. ஆனாலும் உன் வாயிலிருந்தே தெரிந்து கொண்டால் என் மனம் நிம்மதி யடையும்."

முத்தையன் சிரித்துக் கொண்டே சொன்னான்: "ஆமாம்; கல்யாணி! அது வாஸ்தவம்தான். எனக்கு ஒரு ஆசைநாயகி இருக்கிறாள். அவள் பெயர்..."

முத்தையன் அந்த வாக்கியத்தை முடிக்கவில்லை. அவன் அதை **"அவள் பெயர் சதாரம்"** என்று சொல்லி முடிப்பதற்குள்ளே எதிரே நின்ற கல்யாணி மாயமாக மறைந்தாள். கீழே கொந்தளித்த கடலில் 'குபுக்' என்ற ஒரு சிறு ஒலி கேட்டது. "ஐயோ! இது என்ன விபரீதம்!" என்று முத்தையன் ஒரு கணம் திகைத்து நின்றான். அடுத்த கணத்தில் அவனும் கடலில் குதித்து மூழ்கினான்.

தண்ணீரில் மூழ்கிய முத்தையனுக்கு நினைவு மட்டும் தெளிவாக இருந்தது. கைகளை நாலாபுறமும் துழாவவிட்டுக் கல்யாணியைத் தேடினான். கடைசியில் அவனுக்கு மூச்சு முட்டிப் போகும் என்றிருந்த சமயத்தில், கல்யாணி கைகளில் தட்டுப் பட்டாள். உடனே அவளைத் தழுவிச் சேர்த்துக் கொண்டு முத்தையன் மேலே கிளம்பினான். மேலே வருகிறான் வருகிறான் வருகிறான் — ஆனால் இன்னும் தண்ணீர் மட்டத்துக்கு வந்து சேர்ந்தபாடில்லை. மூச்சோ இணறுகிறது. கடைசியாகத் தன்னுடைய முழு பலத்தையும் பிரயோகித்துக் காலை உதைத்து மேலே எழும்பினான். அப்பா! மேலே

வந்தாயிற்று. ஒரு நெடிய பெருமூச்சு விட்டுக் கண்களையும் திறந்தான்.

* * *

**அ**ச்சமயம் முத்தையனுக்கு உண்மையாகவே பிரக்ஞை வந்தது. அவனுடைய கண்கள் திறந்தன. என்ன ஆச்சரியம்! இது நிஜந்தானா? மறுபடியும் கண்களை மூடித் திறந்தான். ஆம்; கல்யாணிதான். இத்தனை நேரமும் கனவில் பார்த்த கல்யாணியேதான். இப்போது நிஜமாகவே அவனுடைய அருகில் உட்கார்ந்துகொண்டிருக்கிறாள். அவளுடைய மென்மையான சரீரம்தான் அவன் மேல் பட்டுக் கொண்டிருக்கிறது. அவளுடைய கண்களிலிருந்துதான் கண்ணீர் பெருகிக் கொண்டிருக்கிறது.

முத்தையன் அவளுடைய கண்ணீரைத் துடைப்பதற்காகத் தன்



கையைத் தூக்க முயற்சி செய்தான். அவ்வாறு தூக்க முடியாமல் பெருமூச்சு விட்டான்.

இதைப் பார்த்த கல்யாணியின் கண்களிலிருந்து கண்ணீர் இன்னும் ஆறாய்ப் பெருகிற்று. சப் இன்ஸ்பெக்டரிடம் தான் கொடுத்திருந்த வாக்குறுதியையும் மறந்து விம்மத் தொடங்கினாள்.

''வேண்டாம்! கல்யாணி! அழாதே!'' என்று முத்தையன் ஈனஸ்வரத்தில் கூறினான். மீண்டும், ''அடுத்த ஜன்மத்தில் நாம் இம்மாதிரி தவறு செய்ய மாட்டோம்; முதலிலேயே கல்யாணம் செய்து கொண்டு விடுவோம்'' என்று சொல்லிப் புன்னகைத்தான்.

இதைக் கேட்ட கல்யாணிக்குத் துக்கம் போய் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. அவளுடைய கண்கள் ஒரு நொடியில் வறண்டு போயின.

''இந்தப் பாவி அடுத்த ஜன்மத்தில் வேறு வந்து உன்னைத் தொந்தரவு செய்ய வேண்டுமா? வேண்டவே வேண்டாம். அடுத்த ஜன்மத்திலாவது உனக்கிஷ்டமானவளைக் கல்யாணம் செய்து கொண்டு சுகமாயிரு'' என்றாள்.

முத்தையன் சிரித்தான். தன்னுடைய உடல் நோவையெல்லாம் மறந்து குதூகலத்துடன் சிரித்தான்.

''கல்யாணி! கோபம் வரும்போது உன் முகம் இவ்வளவு அழகாய் இருக்கும்படி பிரம்மதேவன் படைத்து விட்டான். அதனால்தான் போலிருக்கிறது.. அந்த நாளிலிருந்து உனக்குக் கோபமூட்டிப் பார்ப்பதிலேயே எனக்குச் சந்தோஷம்'' என்றான்.

கல்யாணியின் முகத்தில் இப்போது எள்ளும் கொள்ளும் வெடித்தது. ''முத்தையா! பொய் புளுகுகட்டெல்லாம் இன்னமும் எதற்காக? என் முகத்தில் அழகு வேறு இருக்கிறதா? அன்று நீ கட்டித் தழுவிக் கொண்டு இருந்தாயே, அவளை விடவா நான் அழகு? ஒருவேளை அதுகூட எனக்குக் கோபமூட்டுவதற்காகத்தான் செய்தாயோ, என்னமோ?'' என்றாள்.

''ஆமாம், கல்யாணி! உனக்குக் கோப மூட்டுவதற்குத்தான். இல்லாவிட்டால், நீ போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் போய் என்னைக் காட்டிக் கொடுப்பாயா?''

கல்யாணியின் கோபம் மாறி மறுபடி துக்கம் வந்தது. ''ஐயோ! முத்தையா! அது பொய்; நான் காட்டிக் கொடுக்கவில்லை. உன்னை இன்னொரு பெண் பிள்ளையுடன் பார்த்ததில் என் சித்தம் கலங்கிப் போயிருந்தது. அப்போது அந்தப் பிராமணன் வந்து என்னவோ கேட்க, நான் என்னமோ உளறி விட்டேன். நீ என்னதான் துரோகம் பண்ணினாலும், ஐயோ! உன்னை வேணுமென்று நான் காட்டிக் கொடுப்பேனா? நானல்லவோ இந்தப் பாழும் உயிரை விட்டிருப்பேன்?'' என்றாள்.

''எனக்குத் தெரியும், கல்யாணி! எனக்குத் தெரியும். நீயா என்னைக் காட்டிக் கொடுத்தாய்? விதியின் விளைக்கு நீ என்ன செய்வாய்?'' என்றான் முத்தையன்.

''விதிதான் அப்படிப் பெண்ணுருவம் கொண்டு வந்தது போலிருக்கிறது! முத்தையா! நீ என்னிடம் பிரியம் கொள்ளாததில் கூட எனக்குத் துக்கம் இல்லை. 'என்னிடம் அன்பாயிரு' என்று ஒருவரைக் கட்டாயப் படுத்த முடியுமா? ஆனால் என்னை எதற்காக நீ ஏமாற்றினாய்? நம்ப வைத்து ஏன் துரோகம் பண்ணினாய்? அதனால் அல்லவா என் சித்தம் அப்படிக் கலங்கிப் போய் விட்டது?''

''கல்யாணி' நான் உன்னை ஏமாற்றவில்லை. விதிதான் உன்னை ஏமாற்றியது. நீ பார்த்தது பெண் பிள்ளை அல்ல; கல்யாணி! அவன் என் சிநேகிதன் கமலபதி! நாடகத்தில் என்னுடன் 'சதாரம்' வேஷத்தில் நடித்தவன். நாம் கப்பல் ஏறுவதற்கு ஏற்பாடு செய்திருப்பதைத் தெரிவிப்பதற்காகவே வந்தான். போலீஸ் தொந்தரவுக்குப் பயந்து

வேகப்பந்து வீச்சுக்குப் பாட்டிங் பிராக்டிஸ் செய்ய வேண்டுமா? போல் பண்ணிக் கொண்டிருக்க ஆள் இல்லையா? இயந்திர பௌலர் கண்டுபிடித்திருக்கிறார் திரு. பௌடிச். இந்த இயந்திரத்தில் பந்தைப் போட்டால் அது மணிக்கு 105 கி.மீ. வேகத்தில் பந்தைக் குறி தப்பாமல் பௌல் செய்கிறது. நமது இந்திய பாட்ஸ்மன்கள் வேகப்பந்து வீச்சை சமாளிக்கப் பயிற்சி பெறச் சிறந்த சாதனம் இது.

-ஹிந்துஸ்தான் டைம்ஸ்.



# தாவண்கெரே

## எடுப்பான கலப்பழகுடன் மிடுக்கான பாணி அமைக்கிறது.




*டெரீன்—CAFI-இன் ரிஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்.

**தாவண்கெரே**
**ஃபாஷன் துணிரகங்கள்**

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.
ஹனுமந்தப்பா கட்டிடம்.
சித்ரதுர்கா ரோடு.
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

பெண் வேஷத்தில் வந்தான்'' என்ருன் முத்தையன்.

* * *

இதைக் கேட்டதும் கல்யாணியின் உள்ளத்தில் ஏற்பட்ட மாறுதலை எவ்வாறு வர்ணிக்க முடியும்? அவளுடைய நெஞ்சை அமுக்கிக் கொண்டிருந்த ஒரு பெரிய பாறுங்கல் திடீரென்று விலகியது போலிருந்தது. மலை உச்சியிலிருந்து சறுக்கி விழுந்து கொண்டேயிருந்தவள் சட்டென்று திடமான பூமியில் உறுதியாக நிற்பது போல் தோன்றியது. முத்தையனுடைய அன்பு பொய்யன்று; அவன் தன்னை ஏமாற்றவில்லை; தனக்குத் துரோகம் செய்யவில்லை; வேறு எது எப்படிப் போனால் என்ன?

இப்படி ஒரு நிமிஷம். அடுத்த நிமிஷத்தில் தான் செய்த பயங்கரமான தவறு அவளுக்கு நினைவு வந்தது.

''ஐயோ! பாவி! என்ன செய்து விட்டேன்? உன்னை அநியாயமாகச் சந்தேகித்து இப்படி விபரீதம் விளைவித்து விட்டேனே? 'பெண் புத்தி' என்று உலகத்தார் இகழ்வது உண்மையாயிற்றே?'' என்று கல்யாணி கதறினாள். வறண்டிருந்த அவள் கண்களிலிருந்து மறுபடியும் கண்ணீர் கலகலவென்று பொழிந்தது.

முத்தையனுடைய ஜீவன் நிமிஷத்துக்கு நிமிஷம் மங்கிக் கொண்டிருந்தது. கல்யாணியின் முகத்தை அடங்காத ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டு அவன் மிகவும் மெலிந்த குரலில் சொன்னான்:

''எனக்கு அதனால் வருத்தமில்லை; சந்தோஷம்தான். என்னிடம் உனக்குள்ள அளவற்ற அன்புதானே அப்படிச் செய்யத் தூண்டிற்று? -- கல்யாணி! சிங்கப்பூருக்குப் போவது, அங்கே சௌக்கியமாயிருப்பது எல்லாம் நடக்காத காரியம் என்று என் மனத்தின் அந்தரங்கத்தில் ஓர் எண்ணம் இருந்து கொண்டே இருந்தது. அது நிஜமாயிற்று. இந்த உலகத்தில் யார் யார் எனக்கு ரொம்பவும் பிரியமானவர்களோ அவர்களாலேயே என் வாழ்வு முடிந்தது. முதலில் அபிராமி, அப்புறம் கமலபதி, பிறகு நீ — உங்கள் மூவருடைய அன்புதான் நான் பிடிபடுவதற்குக் காரணமாயிற்று. இது எனக்குக் கெடுதலாயிருக்குமா? ஒரு நாளும் இல்லை. இதுதான் எனக்குத் தகுந்த முடிவு....''




பொதுவாக, ஆசிரியர்கள் தம் புத்தகங்களை, தம் தந்தைக்கோ, தாய்க்கோ, தம்மை எழுதத் தூண்டிய மனிதர்க்கோதான் சமர்ப்பணம் செய்வார்கள். கவிஞர் வைரமுத்து தமது ''என் பழைய பனை ஓலைகள்'' என்ற நூலை யாருக்குச் சமர்ப்பணம் செய்திருக்கிறார் தெரியுமா?

''பனிக்குடம் சுமக்கும்
பச்சையப்பன் கல்லூரிப்
புல்வெளிகளுக்கு...''

இதற்குக் காரணமும் உண்டு என்பது ''கவிராஜன் கதை'' நூல் வெளியீட்டு விழாவில் ஏ. வி. எம். சரவணன் பேசிய போது தெரிந்தது. அவர் சொன்னார்: ''பசும்புல் தரையில் வெறுங்காலோடு நடக்கும் போதுதான் தமக்குக் கற்பனை ஊற்றெடுப்பதாக வைரமுத்து அடிக்கடி கூறுவார்!''

தகவல்: எஸ். சந்திரமௌலி.

முத்தையனுடைய குரல் இன்னும் மெலிவடைந்தது. அவனுடைய கண் விழிகள் மேலே சென்று மறைந்தன. ஆனால் இதழ்களில் புன்னகை மட்டும் மாறவில்லை.

''கல்யாணி! எங்கே இருக்கிறாய்? அருகில் வா! ஒரு முக்கிய சமாசாரம் சொல்கிறேன்'' என்றான். கல்யாணி, இடையில் சற்று விலகியிருந்தவள், மறுபடியும் நெருங்கி வந்து முத்தையனுடைய முகத்துக்கு அருகில் தன் முகத்தை வைத்துக் கொண்டு ''இதோ இருக்கிறேன், முத்தையா!'' என்றாள்.

''இதோ பார்! அபிராமிக்கு ஒரு ஏற்பாடு செய்து விட்டேன். கமலபதி அவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான். இனிமேல் நம்முடைய கல்யாணத்துக்கு யாதொரு தடையும் கிடையாது. உனக்குச் சம்மதந்தானே?'' என்று முத்தையன் முணுமுணுத்தான்.

''சம்மதம், சம்மதம்'' என்றாள் கல்யாணி.

''அப்படியானால் மேளத்தைப் பலமாக வாசிக்கச் சொல்லு. இதோ இப்போதே தாலி கட்டி விடுகிறேன்'' என்று சொல்லி முத்தையன் இரத்தமிழந்த, பலஹீனமடைந்திருந்த தன்

இரண்டு கைகளையும் எடுத்துக் கல்யாணியின் கழுத்தைக் கட்டிக்கொண்டான்.

அப்போது கோயிலில் உச்சகால பூஜை நடந்து கொண்டிருந்தது.

பெரிய மேளம் ஜாம் ஜாம். என்று முழங்கிற்று.

ஆலாட்சி மணி 'ஓம் ஓம்' என்று இசைத்தது.

## அத்தியாயம் 54

## கடவுளின் காதலி

இத்தனை காலமாக நாம் நெருங்கிப் பழகிய சிநேகிதர்களிடமிருந்து நாம் விடைபெற வேண்டிய வேளை வந்து விட்டது.

முத்தையன் இவ்வுலகத்திடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான். ஆனால் அவனுடைய ஞாபகம் அனேகருடைய உள்ளத்தில் நிலைபெற்று அவர்களுடைய வாழ்க்கையே மாறி அமைவதற்குக் காரணமாயிற்று.

அத்தகையவர்களில் முதன்மையாக ஸ்ரீமான் சர்வோத்தம சாஸ்திரியைக் குறிப்பிட வேண்டும். சாதாரணமாய்ப் போலீஸ் உத்தியோகஸ்தர்களிடம் நாம் எதிர்பார்க்கும் குணங்கள் அவரிடத்தில் இல்லை என்பதை முதலிலேயே கண்டோம். அவர் அப்படி ஓர் அசாதாரண போலீஸ் அதிகாரியாக இருந்த படியினால்தான் இந்தச் சரித்திரம் இவ்வளவு தூரம் நீண்டு வந்தது.

முத்தையனுடைய முடிவு சாஸ்திரியைப் பெரிதும் சிந்தனையில் ஆழ்த்தி அவரை உலக வாழ்க்கையின் மகா இரகசியங்களைப் பற்றிய விசாரணையில் இறங்குமாறு தூண்டிற்று.

''அறத்திற்கே அன்பு சார்பென்ப
அறியார்
மறத்திற்கும் அஃதே துணை''

என்னும் தமிழ் மறைக் கூற்றின் உண்மைப் பொருளை அவர் அப்போதுதான் நன்கு உணர்ந்தார். இந்தக் குறளுக்குச் சாதாரணமாய் ''நற்கருமங்களுக்கே அன்பு ஆதாரமென்று தெரியாதவர்கள் சொல்வார்கள்; தீச் செயல்களை விலக்குவதற்கும் அன்பே ஆதாரமானது'' என்று வலிந்து பொருள் கூறுவது வழக்கம். ஆனால் தமிழ்நாட்டில் தற்போது வாழ்ந்திருக்கும் பெரியோர்களில் ஒருவர், மேற்படி பொருளின் பொருத்தமின்மையை எடுத்துக் காட்டி, ''தீய செயல்களுக்கும் கூட அன்பே தூண்டுகோல்'' என்று பொருள் கூறியதை சாஸ்திரியார் கேட்டிருந்தார். இது எவ்வளவு உண்மை என்பது முத்தையனுடைய வாழ்விலிருந்து அவருக்குத் தெளிவாக விளங்கிற்று.

அபிராமியிடம் வைத்திருந்த அன்பினால் அல்லவா முத்தையன் கள்வனாக நேர்ந்தது? மற்றும் பல தீச்செயல்களை அவன் செய்யும்படி நேர்ந்ததற்கும் அந்த அன்பேயல்லவா காரணமாயிற்று?

* * *

மற்றும் வாழ்வுக்கு அன்பு காரணமாயிருப்பது போல் மரணத்துக்கும் காரணமாகிறது என்பதையும் சாஸ்திரியார் கண்டுணர்ந்தார். முத்தையனிடம் அபிராமியும், கமலபதியும், கல்யாணியும் கொண்டிருந்த அன்பேயன்றோ அவனுக்கு யமனாக முடிந்தது? ஆனால் அந்த மரணத்தைத் தீயது என்று சொல்ல முடியுமா? அத்தகைய தூய அன்பின் காரணமாகத் தீமை விளைவது சாத்தியமா?

இவர்களுடைய துன்பத்துக்கெல்லாம் ஆதி காரணமான கார்வார் சங்குப் பிள்ளை இன்னும் உயிர் வாழ்ந்து தன்னுடைய பாப கிருத்தியங்களை நடத்திக் கொண்டுதான் இருக்கிறான். ஆனால் கொடிய சந்தர்ப்பங்களின் காரணமாகக் கள்வனாக நேர்ந்த முத்தையனோ துப்பாக்கிக் குண்டுக்கு இரையாகி மரணமடைந்தான். இந்த முரண்பாட்டைப் பார்க்கும்போது வாழ்வு நல்லது, மரணம் தீயது என்று சொல்வதற்குத்தான் இடமிருக்கிறதா?

கண்ணன்: ஏம்பா சர்வர் ஸ்பெஷல் வடை கேட்டால் சைக்கிள் டயரைக் கொண்டு வருறியே?

சர்வர்: இது ஸ்பெஷல் வடைதானுங்க. சரக்கு மாஸ்டர் துளையைக் கொஞ்சம் பெரிதாகப் போட்டு விட்டார்!

-லலிதா செல்லப்பா.



உலகத்திலே எல்லாக் காரியங்களும் ஏதோ ஒரு நியதிப்படி, காரண காரியத் தொடர்புடன்தான் நடந்து வருகின்றன. நன்மையின் பலன் இன்பம் தீமையின் விளைவு துன்பம் என்பதிலும் சந்தேகமில்லை. ஆனால் நன்மை எது, தீமை எது, சுகம் எது, துக்கம் எது என்றெல்லாம் நிர்ணயிப்பது மட்டும் எளியதன்று. ''நன்மை தீமை, சுக துக்கம் முதலிய துவந்த உணர்ச்சியைக் கடந்தவன்தான் ஞானி; அவன்தான் சித்த புருஷன்'' என்று பெரியோர் சொல்வதன் ரகசியமும் ஒருவாறு சாஸ்திரிக்குப் புலனாகத் தொடங்கிற்று.

இவ்வாறெல்லாம் ஆத்ம சிந்தனையிலும், தத்துவ விசாரணையிலும் இறங்கிவிட்ட சாஸ்திரிக்குப் போலீஸ் இலாகா உத்தியோகம் பிடிக்காமல் போனதில் வியப்பில்லை யன்றோ? உரிய காலத்துக்கு முன்பே அவர் பென்ஷன் பெற்றுக் கொண்டு விலகி, பாரமார்த்திக சாதனங்களிலும், பொது நன்மைக்குரிய காரியங்களிலும் ஈடுபடலானார். ''போலீஸ் சாமியார்'' என்றும், ''போலிச் சாமியார்'' என்றும் கூட அவரை அநேகர் பரிகசித்தார்கள். ஆயினும் அவர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஒன்றாகக் கருதும் மனநிலையை அவர் அடைந்து விட்டார். அவருடைய நற்காரியங்களுக்கெல்லாம் அவருடைய தர்ம பத்தினி பெரிதும் உதவி புரிந்து வந்தாள் என்று சொல்லவும் வேண்டுமா?

✲ ✲ ✲

முத்தையன் இறந்த பிறகு சாஸ்திரியின் முயற்சியினால் குறவன் சொக்கன் விடுதலை செய்யப் பட்டான். ஆனால் அந்தப் பாவி மகன் சும்மா இருக்கவில்லை. கொள்ளிடக் கரைக் காட்டுக்குப் போய்ப் பல தினங்கள் அலைந்து திரிந்து கடைசியில் முத்தையன் மரப் பொந்தில் ஒளித்து வைத்திருந்த சில நகைகளைத் தேடிப் பிடித்தான். அவற்றை அவன் டவுனில் கொண்டு போய் விற்க முயன்றபோது போலீசார் பிடித்துக் கொண்டார்கள். வேறொரு திருட்டுக் கேஸில் அவனைச் சம்பந்தப்படுத்தி மூன்று வருஷம் கடுங்காவல் விதித்துச் சிறைக்கு அனுப்பி விட்டார்கள். ஆனால், இதன்பொருட்டு நாம் சொக்கனிடம் அனுதாபம் காட்ட வேண்டிய அவசியமில்லை. அவன் பிறவியிலேயே வேதாந்தியாய்ப் பிறந்தானில்லையா? அவனுக்கு வெளியிலிருப்பதும் ஒன்றுதான்; சிறையிலிருப்பதும் ஒன்றுதான். சுகமும் ஒன்றுதான்; துக்கமும் ஒன்றுதான். இரு வினைகளையும் கடந்த யோகி என்று உண்மையில் அவனையல்லவா சொல்ல வேண்டும்?



''முன்பெல்லாம் அடிக்கடி ஜோக் எழுதுவீங்க. இப்போ ஏன் எழுதறதில்லே.''
''இப்போ எனக்குக் கல்யாணமாயிட்டது.''
ஈழ. அ. கதிர்வேல்.

✲ ✲ ✲

உரிய காலத்தில் கமலபதியும் அபிராமியும் கல்யாணம் செய்து கொண்டார்கள். முத்தையனுடைய மரணத்தினால் கமலபதிக்கும் அபிராமிக்கும் ஏற்பட்ட அளவில்லாத துக்கமே அவர்களை ஒன்று பிணைப்பதற்கு முக்கிய சாதனமாயிருந்தது. முத்தையனை நினைத்து அவர்கள் விட்ட கண்ணீர், அவர்களுடையகாதல் பயிரைத் தளிர்க்கச் செய்யும் வானமழையாயிற்று. இப்படி அவர்களுடைய நேசத்தைப் பெருக்கி வளர்த்த பிரிவுத் துக்கம் நாளடைவில் மறைய, அவர்களுடைய காதல் இன்பம் மட்டுமே மிஞ்சி நின்றது. சில சமயம் அவர்கள், ''ஐயோ! முத்தையனைப் பிரிந்த பிறகு நாம் இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறோமே?'' என்று எண்ணி வெட்கமுறுவார்கள். பின்னர், ''நாம் இப்படிச் சந்தோஷமா யிருப்பதுதான் முத்தையனுக்கும் மகிழ்ச்சி தருவதாகும்'' என்று எண்ணி ஒருவாறு ஆறுதல் பெறுவார்கள்.

✲ ✲ ✲

கல்யாணி உயிர் வாழ்ந்திருந்தாள்!

முத்தையனுடைய மரணத்துக்குப் பிறகு அவளும் உயிர் துறப்பாள் என்று எதிர்பார்க்கக் கூடும். ஆனால் உண்மையில் அவ்வாறு நேரவில்லை.

முத்தையன் பிடிபட்ட அன்றே உயிர் துறக்க முயன்ற கல்யாணி அவனுடைய மரணத்திற்குப் பிறகு அம்மாதிரி முயற்சி செய்யாதது ஆச்சரியம் அல்லவா?

ஆச்சரியம்தான்; ஆனால் அதற்கு ஒரு முக்கிய காரணம் இருக்கத்தான் செய்தது.

முதல் நாள் கல்யாணி உயிர் துறக்க முயன்றபோது அவள் ''இவ்வுலகத்தில் உண்மையானது ஒன்றுமே இல்லை; எல்லாமே பொய்'' என்ற மனோபாவத்தில் இருந்தாள். மறு நாள் முத்தையனைப் பார்த்த பிறகு அந்த எண்ணம் அவளுக்கு மாறிவிட்டது. ''உலகில் உறுதியானது, உண்மையானது, அழிவில்லாதது ஒன்று உண்டு: அது அன்பு'' என்ற உறுதிப்பாடு அவளுக்கு ஏற்பட்டது.

* * *

யமுனா தீரத்தில் வேணுகானம் செய்து மாடு மேய்த்துத் திரிந்த கண்ணன் திடீரென்று ஒரு நாள் மதுரைக்கு ராஜரீகம் நடத்தச் சென்ற பிறகு, பிருந்தாவனத்தில் அவனுடைய தோழர் தோழிகள் எல்லாம் துயரக் கடலில் ஆழ்ந்து விடுகிறார்கள். ஆனால் ராதை மட்டும் அவ்வாறு துயரப்படவில்லை.. அவள் தன் சிநேகியிடம் சொல்கிறாள்:

''தோழி, ஏன் துயரப்பட வேண்டும்? இந்த உலகத்தில் சாசுவதமானது எது தான் உண்டு? சகலமும் அநித்யமல்லவா? மனுஷர்கள் அநித்யம்; வாழ்வு அநித்யம், சுகங்கள் எல்லாம் அநித்யம் இது தெரிந்திருக்கும்போது கிருஷ்ணன் போய்விட்டானே என்று நாம் ஏன் வருத்தப்பட வேண்டும்?

''சகியே! இந்த உலகில் நித்யமானது ஒன்றே ஒன்று இருக்கிறது. அது தான் பிரேமை.

மலைப்பிரதேசங்களில் அதிக அளவு உற்பத்தியாகும் ஆப்பிள்களைப் பல இடங்களுக்கும் மரப்பெட்டிகளில் பத்திரமாக அடைத்துஅனுப்ப ஒரு வருடத்திற்கு ஒரு லட்சம் மரங்களை வெட்டிச் சாய்க்கிறார்கள்! இப்படி வெட்டப்பட்ட மரங்களுக்குப் பதிலாகப்புதிய மரங்களைவளர்க்காமல், இந்நிலை தொடர்ந்தால்.... என்று கவலைப் படுகிறார்கள் விஞ்ஞானிகள். மரப்பெட்டிகளுக்கு ஈடான மாற்றுப் பொருளுக்கு ஆராய்ச்சி நடக்கிறது.

-தகவல்: பாத்திமுத்து.



''பிரேமைக்கு உரியவன் கூட அநித்யம்தான். அவன் போய்விடுவான். ஆனால் பிரேமை மட்டும் ஒரு நாளும் அழியாது. அது நித்யமானது.

''தோழி! நமது ஹரி பெரிய திருடன் அல்லவா? ஆனால் அவன் கூடத் திருட முடியாத ஒன்று இருக்கிறது. அதுதான் நமது இருதயத்தில் உள்ள காதல். அவனால் கூட அதைத் திருடிக் கொண்டு போக முடியவில்லையல்லவா?

''பின் எதற்காக நாம் துக்கப்பட வேண்டும்?''

ராதையின் மேற்சொன்ன மனோநிலையைத்தான் கல்யாணி அடைந்திருந்தாள். முத்தையனுடைய மரணம் அவளுக்குத் துக்கம் விளைவிக்கவில்லை என்று நாம் சொல்ல மாட்டோம். ஐயோ! கல்யாணிக்கா துக்கமில்லை? துக்கமில்லாமலா அப்படிச் சித்திரப் பதுமை போல் நிற்கிறாள்? துக்கமில்லாமலா அப்படிக் கண்ணீர் பெருக்குகிறாள்? ஆனால் அது சாதாரணத் துக்கமல்ல, அதிசயமான துக்கம் என்று மட்டும் சொல்லத்தான் வேண்டும்.

சாதாரணத் துக்கமாயிருந்தால் அதை மறக்க முயல்வது அல்லவா நியாயம்? அதுதானே மனித இயற்கை! ஆனால் கல்யாணி அந்தத் துக்கத்தை மறக்க விரும்பவில்லை. அந்த மகத்தான துக்கத்திலே அவள் ஏதோ ஒரு மகத்தான இன்பத்தையும் கண்டிருக்க வேண்டும்.

உண்மையில், கல்யாணி இரண்டாம் முறை உயிர் துறக்க முயலாததின் காரணமே இதுதான்; உயிர் துறந்தால் முத்தையனுடைய ஞாபகம் போய்விடுமோ என்னமோ? அன்றிரவு தண்ணீரில் விழுந்த உடனே எல்லா ஞாபகமும் போய் விட்டதே! சாவிலும் அப்படித்தானே போய்விடும்?— வேண்டாம்! முத்தையனையும் அவனுடைய காதலையும் மறந்துவிடச் செய்யும் மரணம் வேண்டாம்!

கல்யாணியின் சுயநலமற்ற, பரிசுத்தமான காதல் அவளை ஒரு தெய்வப் பிறவியாக மாற்றியது. வாழ்க்கையில் அவளுடைய செயல்கள் எல்லாம் அதற்கு உகந்தவையாகவே அமைந்தன. பூங்குளத்திலும் தாமரை ஓடையிலும் அவளுக்கு இருந்த இரண்டு சொத்துக்கள் அனைத்தையும் ஏழைகளின் துயர் தீர்ப்பதற்காகவே அவள் பயன்படுத்தி வந்தாள்.

கள்வனின் காதலி, நாளடைவில், கடவுளின் காதலி ஆனாள்.

[முற்றும்]

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ரமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ரமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.




IS : 1806
ISI

**உயரம், வலிமை, உடல்திடம்--**
**பெருக்குவது எப்படி ?**

பார்த்ததியாச் சலுகை: பலம்பெருக்கப் புத்தகம்!

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY-400 001. kk

அன்புள்ள நியூட்ரமுல்,
தாராசிங்கின் "ஹைட் இக்ச்ஸ், ஸ்ட்ரெங்த் அண்ட் ஃபிட்னஸ்" புத்தகத்தை தயவுசெய்து எனக்கு அனுப்பிவைக்கவும். ரூ. 1.50 மதிப்புள்ள தபால் வில்லைகளோடு, நியூட்ரமுல் 500 கிராம் டின் வாங்கியதற்கான ரொக்க ரசீதையும் இத்துடன் இணைத்துள்ளேன். ... சலுகை என அறிகிறேன்.

பெயர் ______________________
(கொட்டை எழுத்துக்களில்)

முகவரி ______________________

விற்பனைதல் விடுப்போர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001.

daCunha/GCM/76/TM/82

# நிழலில் மறையும் நிஜங்கள்

—ஜெயவண்ணன்—

பத்மாவின் கண்கள் அந்தப் பத்திரிகையில் நிலைத்து நின்றன.

அந்தப் பக்கத்தில்—

ஜெயராஜ்' விளையாடியிருந்தார்.

கிட்டத்தட்ட பத்மாவின் வயதில் ஒரு பெண் நாணத்தின் சுமையோடு சற்றே நெளிந்தவாறு நிற்க, அவள் தலையில் பூவைச் சூடிய அவள் கணவன் அவளது இடைக்கும் சற்று மேலே மார்பை ஒட்டித் தன் கரங்களால் அவளைச் சுற்றி வளைத்துத் தன்னருகே இழுத்துக் கொண்டு, முகத்தை மெல்லக் குனிந்து அவள் தலையிலிருந்த மல்லிகையின் மணத்தை முகர்ந்து, அதன் மயக்கத்தில் இறங்கி நிற்க...

எரிச்சலோடு புத்தகத்தை மூடினாள் பத்மா.

ஆறு மாதங்களுக்கு முன்—

இதே போன்ற சம்பவங்களை அவள் தினம் தினம் சந்தித்தது உண்டு.

இது மட்டுமா?

இன்னும்... இன்னும்...

விடியற்காலை மூன்று மணிக்கு அவளுக்குத் தெரியாமல் அலாரம் வைத்திருந்தான் அவள் கணவன் கோபி. அலாரம் சப்தத்தைக் கேட்டு, அதன் தலையில் செல்லமாகத் தட்டி அதை அமைதிப்படுத்தி விட்டுப் பத்மாவை மெல்ல எழுப்புவான்.

''விடிந்து விட்டது....''

அவசரம் அவசரமாக எழும் பத்மா, கட்டிலை விட்டு இறங்கி, புடவையைச் சரியாகக் கட்டிக் கொண்டு நகர முயலும்போது,

அவன் தாவி அவள் சேலை முனையைப் பிடிப்பான். பின், 'சடே'ரென்று இழுப்பான்.

தடுமாறும் அவள் அவன் மேல் சாய, அவசர அவசரமாக அவளை இழுத்துத் தன் போர்வையின் உள்ளே முழுவதுமாகச் சிறை செய்து....

அப்புறம்?...

சில காலை நேரங்களில்; விடிந்த பின்னர் கூட கோபி, கிருஷ்ணனாக மாறியதுண்டு.

குளித்து முடித்து தலை நிறையப் பூவோடு காப்பி கொண்டு வருவாள் அவள்.

காப்பியை அருகே வைத்து விட்டு, போர்வையை மெல்ல விலக்கி விட்டு அவனை எழுப்புவாள். கண் திறக்கும் அவன் அவளது அழகை ரசிப்பான். அப்போதுதான் பூத்த புத்தம் புது மலராய்ப் புதுப் பொலிவுடன் நிற்கும் அவளை மீண்டும் மீண்டும் அவன் பார்ப்பான். அவளை அணைத்து ரசிப்பான்.

பிறகு—

கடந்து போன நாட்களின் நினைவுகள் சரமாகித் தொடர...

பத்மாவின் கண்களில் கண்ணீர் சரம் கோத்து உதிர்ந்தது.

அவளுக்குக் கோபி எந்தக் குறையையும் வைக்கவில்லை. மணமாகி ஆறு மாத காலம் அவர்கள் வாழ்க்கை சொர்க்கம்!

இடையே நடந்த அந்த ஒரு நாள் சண்டை மட்டும் நடந்திராவிட்டால்....?

அன்று—

பக்கத்து வீட்டு சுபத்ரா பகல் காட்சி சினிமாவுக்கு அவளை அழைத்தாள். பத்மாவும் புறப்பட்டுப் போனாள்.

கோபி வழக்கமாக ஐந்தரை மணிக்குத் தான் வருவான். அதற்குள் திரும்பி விடலாம் என்று நினைத்தாள்.

ஆனால் கோபி அன்று நான்கு மணிக்கே வந்து விட்டான்.

அலுவலக வேலையாக அவனோடு வேலை பார்க்கும் பாண்டுரங்கன் அன்று பெங்களூர் போக வேண்டும். ஐந்து மணி பஸ்ஸில் ஒரு வாரம் முன்னதாகவே டிக்கட் ரிசர்வ் செய்து வைத்திருந்தார்கள். திடீரென்று பாண்டுரங்கன் உடல் நலம் சரியில்லாது போகவே கோபியைப் புறப்பட்டுப் பெங்களூர் போகும்படி அலுவலகத்தில் மூன்று மணிக்குச் சொன்னார்கள்.

வீடு பூட்டியிருந்தது. பக்கத்து



வீட்டில் சாவி இருக்கும் என்றெண்ணி அங்கே போனால் அந்த வீடும் பூட்டியிருக்கவே கோபிக்கு ஒன்றும் புரியவில்லை.

கோபி குழப்பத்தோடு தவித்துக்கொண்டிருந்தபோது ஆறு மணிக்குப் பத்மா வந்தாள்.

அவனுக்கு வந்த கோபத்துக்கு அவளை நாலு அறை அறையலாம் என்று தோன்றியது. ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, நடந்ததைச் சொல்லி, பெங்களூர் பஸ்ஸைத் தவற விட்டதையும் சொன்னான்.

''ஸாரி, நீங்க இப்படித் திடீர்னு வருவீங்கன்னு எதிர்பார்க்கலே...'' என்றாள் பத்மா வருந்தும் குரலில்.

''காலையிலேயே என்கிட்டே ஒரு வார்த்தை கேட்டிருந்தால் இன்னொரு சாவியை எடுத்துக்கிட்டுப் போயிருப்பேனே...''

''திடீர்னு புறப்பட்டோம். அதனால் தான்....''

''வரவர நீ செய்யறது அவ்வளது நல்லா இல்லே...''

''ஆசை அறுபது நாள். மோகம் முப்பது நாள்னு சொல்லுவாங்க. நமக்குக் கல்யாணமாகி ஆறு மாசம் ஆயிட்டுதே. அதனால்தான் என்னை உங்களுக்குப் பிடிக்கலே. நான்' செய்யறதும் உங்களுக்குப் பிடிக்கலே.''

''ஆமாம். அப்படித்தான் வைச்சுக்கோயேன்.''

''என்னைப் பிடிக்கல்லேன்னு நேரே சொல்லிடறதுதானே. அப்புறம் எனக்கு இங்கே என்ன வேலை? நான் என் அம்மா வீட்டுக்குப் போயிடறேன்...''

அவள் புறப்படத் தயாரானாள். துணிகளை எடுத்துப் பெட்டியில் அடுக்கினாள். சில நிமிடங்களில் பெட்டியோடு அவன் முன்னே வந்து நின்றாள்.

''ஒன்று மட்டும் சொல்றேன். கேட்டுட்டுப் போ. இப்போ நீயாத்தான் போறே. திரும்பி நீயாகவே வந்தால் சரி. நான் வந்து கூப்பிடுவேன்னோ, சமாதானம் செய்வேன்னோ கனவில் கூட நினைக்காதே!''

அம்மா வீடு அதே ஊரில்தான். உடனே, புறப்பட்டு வந்து விட்டாள்.

ஆறுமாத காலம் ஓடிவிட்டது.

அன்று.

மரகதம் பரிமாறக் குருபாதம் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

''மரகதம்! நம்ப மாப்பிள்ளையை இன்னைக்குக் கடை வீதியிலே பார்த்தேன்!''

''அப்படியா?''

ஹாலில் இருந்த பத்மாவுக்கு இவர்கள் பேச்சு தெளிவாகக் கேட்டது. கையிலிருந்த புத்தகத்தை மூடிவிட்டுப் பேச்சை ஊன்றிக் கவனிக்கத் தொடங்கினாள்.

அப்பா தொடர்ந்தார்: ''ஆமாம், மரகதம். அவரும் அவரோட அப்பாவும், அம்மாவும் பொண்ணு பார்க்க நேற்று திருவானைக் கோவில் போயிருந்தார்களாம்.''

''......''

''பொண்ணு ரொம்பப் பிடிச்சிருக்காம். அடுத்த மாசமே கல்யாணத்தை வச்சுக்கப் போறதா மாப்பிள்ளை சொன்னார்...''

''......''

''இன்னொரு விஷயம் தெரியுமா?''

''சொல்லுங்க.''

''அப்படியே வர வழியிலே ஊரிலேருந்து வந்திருக்கிற சம்பந்தியையும் பார்த்துவிட்டு வந்தேன். கல்யாணத்தைப் பற்றியும் விசாரிச்சேன். பத்மாவைப் பற்றிக் கேட்டார். பொண்ணு பார்த்துட்டு வந்த விவரத்தையும் சொன்னார். 'முதல் கல்யாணம்தான் இப்படி ஆயிடுத்து. ரெண்டாவது கல்யாணமாவது நல்லா நடந்தாச்சரி'ன்னு வருத்தத்தோடு சொன்னார்.''



உட்கார்ந்திருந்த பத்மா சடேரென்று இடத்தை விட்டு எழுந்தாள்.

இரண்டாவது கல்யாணமா?

கோபிக்கா?

அவள் மேல் உயிரையே வைத்திருந்த அவன் இதற்கு எப்படிச் சம்மதித்திருக்க முடியும்?

அவள் மனத்தில் இலேசான தடுமாற்றம்.

'இதற்கு ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன். இது நிச்சயம் நடக்காது. நடக்கவும் விட மாட்டேன்.'

மறு கணம்—

அவசரம் அவசரமாக அறைக்குள் புகுந்தவள் கிடைத்த துணிகளைப் பெட்டியில் அள்ளித் திணித்துக் கொண்டு அதே ஆவேசத்துடன் அப்பாவின் முன் வந்து நின்றாள்.

''அப்பா...''

கையில் பெட்டியோடு நிற்கும் மகளை வியப்போடு பார்த்தார் குருபாதம்.

''நான் அவர் கிட்டப் போறதா முடிவு பண்ணிட்டேன். தயவு செய்து எனக்காக ஒரு ஆட்டோ கொண்டுவர முடியுமா?''

''இதோ போறேம்மா...'' குருபாதம் மகிழ்ச்சியுடன் இடத்தை விட்டு எழுந்தார்.

மறுநாள்.

''மரகதம்!''

''என்னங்க?''

''நம்ப பத்மாவையும் கோபியையும் வழி [illegible]. சினிமாவுக்குப் போறாங்களாம். ரெண்டு பேரும் முன் போலவே சந்தோஷமாப் போறதைப் பார்க்கும்போது எவ்வளவு மகிழ்ச்சியா இருந்தது தெரியுமா?''

''அப்படியா?'' என்று மகிழ்வோடு கேட்ட மரகதம் மறுபடி கேட்டாள்: ''ஏங்க எனக்கு ஒரு சந்தேகம்.''

''என்ன, கேளு.''

''திருவானைக்கோவில் போய் மாப்பிள்ளையும் சம்பந்தியும் பொண்ணு பார்த்துட்டு வந்ததாச்சொன்னீங்களே அதுஉண்மையா?''

''ஆமாம், உண்மைதான்.''

'''ரெண்டாவது கல்யாணமாவது நல்லா அமைஞ்சா சரிதான்'னு சம்பந்தி சொன்னதாச் சொன்னீங்களே, அதுவும் உண்மையா?''

''ஆமாம், அதுவும் உண்மைதான்.''

''அப்போ, ரெண்டாவது கல்யாணம் யாருக்கு? கோபிக்கா?''

அவள் கேள்வியைக் கேட்டு விட்டுக் 'கல கல' வென்ச் சிரித்தார் குருபாதம்.

''அடி அசடே, நம்ப சம்பந்தி வீட்டிலே ரொம்ப வருஷத்துக்குப் பிறகு நடந்த நல்ல காரியம் கோபியோட கல்யாணம்தான். இப்போ பொண்ணு பார்த்துட்டு வந்தது கோபியோட தம்பி ராஜாவுக்கு. முதலில் நடந்தது கோபியோட கல்யாணம், இப்போ ராஜாவுக்கு நடக்கப் போறது அவங்க வீட்டிலே நடக்கப் போற ரெண்டாவது கல்யாணம்....''





# குப்பைக் கூடைக்குப் போகாதவை!



பம்பாயில் 30 அல்லது 40 கிலோ மீட்டர் தொலைவிலிருந்து ரயிலில் பெண்கள் வேலைக்கு வருகிறார்கள். இவர்களில் சிலர் மின்சார ரயிலில் வீடு திரும்பும்பொழுது காய்கறிகளை ரயிலிலேயே நறுக்கிக் கொள்கிறார்கள். வீட்டிற்குப் போனதும் நேரத்தை வீணாக்காமல் சமையலை ஆரம்பித்து விடுகிறார்கள்! எப்படி ஐடியா?

செம்பூர் சந்து!

நிருபர்: ...உங்க வயது என்ன?

நடிகை: பதினாறு ஆரம்பம்.

நிருபர்: உங்க பெற்றோருக்கு நீங்க ஒரே பெண்ணா?

நடிகை: இல்லே. எனக்கு ஒரு தங்கை இருக்கிறாள்.

நிருபர்: அவங்களுக்கு நடிக்க விருப்பம் இல்லையா?

நடிகை: இருக்கு. ஆனா, அவளுக்கு ரொம்ப வயசாயிட்டதுனால நடிக்க சான்ஸ் கிடைக்கல்லே!

-ஆ. சந்திரசேகரன்





''என் மாமி, உங்க பிள்ளையை இப்படிப் போட்டு அடிக்கறீங்க...? அவன் என்ன தப்புச் செய்தான்?''

''போன மாசம் 25ம் தேதிதான் குளிச்சான். இன்னும் இருபது நாள் கூட ஆகலே. மறுபடியும் குளிக்கணும்னு அடம் பிடிக்கிறான்!''

-ஆர். அரிகோபி



ஒருவர்: ஒரு வாரத்துக்கு முன் இங்கே ஒரு பெரிய மலை இருந்ததே எங்கே காணோம்?

இன்னொருவர்: அது வியாபாரி கஞ்சனிடம் ...வெட்டிக் கொ...

ஒருவர்: குடி குடியைக் கெடுக்கும் என்பது சரியாகத்தான் இருக்கு.

மற்றவர்: எப்படி?

ஒருவர்: எனக்குக் கல்யாணம் ஆனதிலிருந்து என் மனைவி என்னைக் குடிக்க விடாமல் தடுத்து விடுகிறாள்!

-ஆர். பி. திருஞானம்



அவர்: என்னங்க இது லஞ்சம் கொடுத்தால் வாங்க மாட்டேங்கறீங்க!

இவர்: புது வருஷத்தில் ஒரு சபதம் எடுத்திட்டிருக்கேன். ஒரு நாளைக்கு ஒருத்தர் கிட்டே மட்டும்தான் லஞ்சம் ...பேன்னு.

-கோபாலகிருஷ்ணன்

...டு கலப்பட
போய் விட்டது.
—ஆர்.பி. திருஞானம்



பம்பாயில் எல். ஐ. சி. நிறுவனம் அதன் ஒன்பது ஊழியர்களுக்கு வேலை நீக்க நோட்டீஸ் அனுப்பியுள்ளது. காரணம் — கடைநிலை ஊழியராகச் சேர்வதற்கான தகுதிகள் ஒன்பதாவது 'பாஸ்' அல்லது எஸ். எஸ். எல். சி. தேர்வில் 54 சத விகிதத்துக்குக் குறைவான மார்க்குகள். இந்த ஒன்பது பேரும் இந்தத் தகுதிகளை விட அதிகமான தகுதிகள் பெற்று, வேறு வேலை கிடைக்காததால் முயன்று கடைநிலை ஊழியர்களாகச் சேர்ந்தவர்கள். அதிகமான தகுதிகள் உடையவர்கள் என்பதால் வேலையிலிருந்து நீக்கப்பட்டு இவர்கள் தெருவில் நிற்கப் போகிறார்கள்.

—'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

வாசு




## ஏதேது இந்தியாவே தேவலாம் போலிருக்கே!

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ரோம் போலீஸ் படையில் 87 காலி இடங்களுக்கு 19,000 நபர்கள் விண்ணப்பம் செய்திருந்தார்கள். ஒவ்வொரு நபருக்கும் இரண்டு தேர்வுகள் நடத்தப்பட்டு 38,000 விடைத் தாள்களைத் திருத்தும் பணியில் ரோம் போலீஸ் படை அதிகாரிகள் ஈடுபட்டதில் 20 மாதங்களில் 2,000 விடைத் தாள்களை மட்டுமே திருத்த முடிந்ததாம். மீதமுள்ள 36,000 விடைத் தாட்களைத் திருத்துவதற்கு இன்னும் 30 வருடங்கள் பிடிக்குமாம். அதற்குப் பின்னர்தான் தேர்வின் முடிவுகள் தெரிய வருமாம்!

—ஏ. நிர்மலாதேவி

ஆதாரம்: நியூடைம்ஸ்





- மின் பற்றாக்குறையினால் ஆண்டொன்றுக்கு இந்தியாவுக்கு ஏற்படும் நஷ்டம் ரூ. 3000 கோடி.
- நமது நாட்டில் 28 போலி தபால் நிலையங்கள் இயங்குவதாக அரசுக்குத் தகவல் கிடைத்துள்ளதாம்.
- சேலம் அரசு மருத்துவ மனையில் கருத்தடை ஆபரேஷன் செய்து கொள்ளும் பெண்களுக்கு 5 லாட்டரிச் சீட்டுகள் (தமிழ்நாடு) இலவசமாக வழங்கப்படுகின்றன.
- நாட்டில் உள்ள 18 உயர்நீதி மன்றங்களில் பைசலாகாமல் தேங்கிக் கிடக்கும் வழக்குகள் 9,37,818 ஆகும். (30-6-82 வரை).

—ஏ. தங்கமுத்து



''அவருக்கு இரண்டாயிரம் ரூபாய் கடன் தருவதாகப் போனவாரம் சொல்லிவிட்டு இன்று இல்லை என்றுவிட்டீர்களே'',

''நேற்று அவர் வீட்டில் 'வாங்கிய கடனைக் கொடுக்காமல் சமாளிப்பது எப்படி?' என்ற புத்தகம் இருப்பதைப் பார்த்து விட்டேன்.''

—ச. சம்பத்குமார்

## 13

அந்தக் கையகலக் கண்ணாடியில் 'டை' யின் முடிச்சு சரியாக விழுந்திருக்கிறதா என்று தெரியவில்லை. முடிச்சைப் பற்றின சமாதானமில்லாமல் அவிழ்த்து அவிழ்த்துப் போட்டதில் கை சோர்ந்து போயிற்று. இருக்கிறபடி இருக்கட்டும் என்கிற அலுப்புடன் அவன் கண்ணாடியை விட்டு நகரும் போது கோமதியின் சிரிப்பு கேட்டது.

''நான் மடிசார் கட்டிக்கத் திண்டாடற மாதிரின்னு நீங்க திண்டாடறேள்?''

முன்னேக்கு இப்பொழுது மன்னி சரளமாகி விட்டாள் என்கிற உணர்வில் ''ஆமாம் பழக்கமில்லேயோல்லியோ?'' என்று சிரித்தான். ''நான் தினம்னு இதைக் கட்டிக்க வேண்டியிருக்கு. இந்தக் கண்ணாடியிலே நம்ம முகம் கூட முழுசாத் தெரியலியே!''

கோமதி சின்னப் பெண்ணைப்போல் சிரித்தாள்.

''அடுத்த சம்பளம் வாங்கினேன்னே ஒரு டிரஸ்ஸிங் டேபிள் வாங்கிடுங்கோ!''

அவனுடைய குழந்தைத்தனத்தைக் கண்டு அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''அதை வாங்கிப் போட்டுட்டு நான் வெளியிலே நிக்கட்டுமா?''

அங்கேயிருந்த அத்தை அவனை அர்த்த புஷ்டியுடன் பார்த்துச் சிரித்தாள்.

''கொஞ்சம் பெரிய கண்ணாடியா வாங்கலாம் மன்னி!'' என்று சமாதானமாகச் சொல்லி விட்டு வாசல் ரேழியில் உட்கார்ந்திருந்த அம்மாவிடம் ''போயிட்டுவரேன்மா'' என்று கிளம்பியதும், ''ஆபீஸ் விட்டதும் நேரா வீட்டுக்கு வாடா!'' என்று அவள் சொல்வது அவன் தெருவை நோக்கி அவசரமாக நடக்கையில் கேட்டது. இவர்களுக்கெல்லாம் ஏதோ அனுமானம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்கிற உணர்வு பஸ் ஸ்டாப்பை நோக்கி விரையும் போது கள்ளத்தனமான சந்தோஷத்தை ஏற்படுத்திற்று.

பஸ் வழக்கமான அவசரத்துடன் வந்து வேகமாகக் கிளம்பிற்று. அவன் டிக்கெட்டை வாங்கிக் கூட்டத்தைத் துழாவிக்கொண்டு



# ஒரு சங்கமத்தைத் தேடி…

வாஸந்தி

முன்னுக்கு நகர்ந்தான். லேசான பார்ப்பூமும் பவுடருமாய் மணத்த உடல்களைத் தாண்டும் போது அந்த நெடி அவன் மேலும்தொத்திக் கொண்டு விடப் போகிறதோ என்று பயமாக இருந்தது.

''ஹாய் கார்த்திக்!''

அவன் திடுக்கிட்டுத் திரும்பினான். ஜன்னல் ஓரமாக விஜய் உட்கார்ந்திருந்தான். சட்டென்று ஒரு சந்தோஷம் மனசை நிறைத்தது.

''ஹாய்! எப்படியிருக்கிறாய் விஜய்?''

''ஃபைன். பரோடா பாங்கில் வேலை பார்க்கிறேன்!''

பரீட்சை நடக்கா விட்டால் ஒரு வருஷம் வீணாகிப் போகும் என்று இவன் அன்று கவலைப்பட்டது ஞாபகத்திற்கு வந்தது.

''குட். எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. விஜய்!''

''ரொம்ப உயரத்தில் நான் பறக்க ஆசைப்படவில்லை கார்த்திக். என்னைச் சேர்ந்தவர்கள் பட்டினி கிடக்காமல் இருந்தால் எனக்குப் போதும்.''

அவனுக்குள் ஒரு சிலிர்ப்பு ஓடிற்று. அத்தனை மெலிந்த உடலில் இத்தனை வைராக்கியம் இருப்பது ஆச்சரியத்தை அளித்தது.

அவன் தோழமையுடன் அவன் முதுகைத் தட்டினான்.

''பறக்க முடிந்தவர்கள் ஆசைப்படுவதில் தவறில்லை விஜய்.''

''உன்னை மாதிரியா? திறமையும் அதிர்ஷ்டமும் சில பேருக்குத் தான் சேர்ந்து வாய்க்கும். நான் கேள்விப்பட்டேன், நீ பிரில்லியண்டாய் பாஸ் செய்தாய் என்று. வார்னர் அண்ட் ட்யூப் ரோவில் உடனே நல்ல வேலை கிடைத்து விட்டதாமே?''

''ஆமாம்!''

''கங்கிராஜுலேஷன்ஸ்! எனக்கு ரொம்ப சந்தோஷம் கார்த்திக்!''

''தாங்க் யூ!''

அடுத்த பஸ் ஸ்டாப்பில் இறங்குவதற்கு ஆயத்தம் செய்து கொண்டே விஜய் சின்னச் சிரிப்புடன் சொன்னான்.

''இன்னொன்றும் கேள்விப்பட்டேன்!''

''என்ன?''

விஜய் குரலைத் தாழ்த்திச் சொன்னான். ''தாராவை நீ சுற்றிக் கொண்டிருக்கிறாயாம். இல்லை, அவள் உன்னைச் சுற்றுகிறாளா?''

கார்த்திக்கிற்குக் கூச்சத்தில் முகம் சிவந்தது.

''இரண்டும் தப்பு. நாங்கள் சேர்ந்தே தான் சுற்றுகிறோம்!''

விஜய் சிரிக்காமல் அவனை யோசனையுடன் பார்த்தான்.

''சுய நினைவோடு சுற்றுகிறாய் என்று நினைக்கிறேன்! பெஸ்ட் ஆஃப் லக்!''

அவன் இறங்கிப் போய் வெகு நேரத்துக்கு அவனுடைய வார்த்தைகள் மனத்தைக் குடைந்தன. தாராவைப் பற்றி இவர்களுக்கெல்லாம் ஒன்றுமே தெரியாது என்று தோன்றிற்று. இவர்கள் அவளுடைய வெளி உருவத்தையும் நீர்மானமான பேச்சையும் வைத்து எடை போடுகிறார்கள் என்று தோன்றுகிறது.



எத்தனை சரளமான பெண் அவள்! எத்தனை பிரியம் உள்ள பெண் அவள்! அவனுடைய வளர்ப்புக்கும் அவளுடைய வளர்ப்புக்கும் இடையே இருந்த கலாசார, பொருளாதார வித்தியாசத்தைப் பற்றி அவள் நினைத்துக் கூடப் பார்க்காதது ரொம்பவும் ஆச்சரியகரமான விஷயமாகத் தோன்றிற்று.

''உன் எளிமை எனக்குப் பிடித்திருக்கிறது!'' இதற்கு என்ன அர்த்தம் என்று அவன் திகைத்தான்.

அவனது வீட்டின் எளிமையும் பழக்க வழக்கங்களையும் தத்ரூபமாய் அறிந்தால் இவள் என்ன நினைப்பாள்? பொது அறிவிலேயே நாட்டமில்லாத அப்பாவும், பாமரத்தனமாகச் சிந்திக்கும் அம்மாவும், கிராமியமாகப் பேசும் மன்னியும், கணேசனும் அத்தையும் —

அவனது பெரிய அனுமானங்களையும் சின்ன பயங்களையும் கண்டு அவள் சிரித்தாள்.

''இந்தக் காரணங்களுக்காகவே எனக்கு உன் வீட்டு ஜனங்களைப் பிடிக்கிறது. ஐ லைக் ஸிம்பிள் பீப்பிள். வேஷம் போடறவாளைப் பார்த்து அலுத்துப் போச்சு எனக்கு கார்த்திக்! வேஷம் போடறதிலே தான் அவாளுக்கு அதிக கவனம் இருக்கே தவிர பிரியம் வைக்கிறதிலே இல்லே!''

அவள் சொல்லும் காரணங்களில் மனசு சமாதானமாகாமல் தவித்தது. இவள் எப்பவும் கற்பனை லட்சியங்களில் வாழ்பவள் என்று தோன்றிற்று. இந்த வீட்டிற்குள் நுழைந்ததுமே, ரசம் போன கைகலக் கண்ணாடியையும் புகைப்படிந்த குளியலறையையும் பார்த்த உடனேயே அவளுடைய கனவு கலைந்து விடாதா?

அவனுடைய கவலைகள் அவளுக்கு வேடிக்கையாக இருந்தன.

''இதெல்லாம் எனக்கு முக்கியமில்லே. முட்டாளே!'' என்று பரிகாசம் செய்தாள்.

''எனக்குப் பணத்தை விட மனுஷத்தனம் தான் முக்கியம். எங்க வீட்டு ஆடம்பர வாழ்க்கை எனக்குப் பிடிக்கிறதே இல்லே. ஐ ஹேட் இட்!''

அவள் குரலில் இருந்த தீவிரம் விநோதமாக இருந்தது. கணேசனின் மௌனம் குழப்புகிற மாதிரி, இவளுடைய பேச்சுக் குழப்பிற்று. இவளைத் தன்னால் என்றாவது முழுதாகப் புரிந்து கொள்ள முடியுமா என்கிற ஐயத்தை எழுப்பிற்று. இதையெல்லாம் மீறிக் கொண்டு அவளிடம் அதிக ஈடுபாட்டையும் மோகத்தையும் ஏற்படுத்திற்று. அவளுடைய ஸ்பரிசமும் அண்மையும் கிளப்பிய போதை ஆயுசுக்கு நிலைக்கக் கூடியது என்கிற பிரமையைக் கிளப்பிற்று.

இப்பொழுது ஒரே ஒரு கவலை அடிக்கடி நினைவை அலைக்கழித்தது. திருட்டுச்சொத்தை ஏந்தி நிற்பது போல் கனத்தது. இந்த விவகாரம் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் தெரிந்தால் என்ன செய்வார்கள்?

நிச்சயமாக அதிர்ச்சி அடையப் போகிறார்கள்.

அவன் ஆயாசத்துடன் சொல்லிக்கொண்டான்.

''என்னுடைய விருப்பத்தை நீங்கள் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். திருவிடைமருதூரிலிருந்தும் திருவாவடுதுறையிலிருந்தும் வரும் பெண்ணைக் கணேசனை போல் பார்க்காமலே மணந்து கொள்ள என்னால் முடியாது. என்னுடைய ரசனைகள் வேறு, பரிமாணங்கள் வேறு...''

''ஆபீஸ் விட்டதும் வீட்டுக்கு வா''

மாலை வேலை முடியும் தருவாயில் அம்மாவின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

ஸ்கூலுக்குப் போகும் பையனைப் போலத்தான் அம்மா நம்மை இன்னும் நடத்துகிறாள் என்று நினைத்துச் சிரிப்பு வந்தது. இன்றைக்கு எப்படியும் நேராக வீட்டிற்குத்தான் போக வேண்டும். தாராவுக்கு இன்று ஏதோ ஒரு மீட்டிங்கிற்குப் போக வேண்டியிருந்தது...

அவன் இருட்டுவதற்குமுன் அன்று வீடு திரும்பிய போது வீடு 'கும்'மென்ற நிசப்தத்தில் இருந்தது. கணேசனும் அப்பாவும் இன்னும் கோவிலுக்குக் கிளம்பாமல் ஏதோ தீவிர யோசனையில் இருந்தார்கள்.

அப்பாவின் முகத்தில் இதுவரை அவன் பார்த்திராத சங்கடமும் கோபமும் தெரிந்தன.

''கார்த்திக்! உன்னைப் பத்தி என்னவெல்லாமோ பராபரியாக் காதிலே விழுந்தது. கொஞ்சங்கூட நன்னால்லே.''

''என்ன விழறது?''

''யாரோ ஒரு பொண்ணோட தினம் ஊர் சுத்தறியாம். படிச்ச பசங்கள்ளாம் இப்படித்தான் நடந்துக்கறளா? இல்லே, என்னை அவமானப்படுத்தணும்னு பார்க்கறியா? நான் ஆரம்பத்திலேயே சொல்லியிருக்கேன். நீ என்ன படிப்பு படிச்சாலும் ஒரு குருக்கள் பிள்ளைங்கறதை மறக்கக் கூடாதுன்னு!''

அவர் அவனைத் தாக்கிய விதம் அவனை என்னவோ செய்தது. 'அந்த விஷயத்தை நான் சாகும் வரை மறக்க முடி

மேலட்டை வண்ணப்படம்:
ரவீந்திரபல்லா



யாது' என்கிற எரிச்சல் ஏற்பட்டது. 'அந்தக் காரணத்தாலேயே அது என்னுள் ஏற்படுத்தும் பாதிப்பு எனக்கு மாத்திரமே புரியும்'' என்கிற துக்கம் கிளம்பிற்று.

''யார்ரா அந்தப் பெண்? பஞ்சாபிக்காரி மாதிரி இருக்காளாம். கார் ஓட்டுறாளாம். அவளுடைய சிவப்பு உடம்பையும், பணத்தையும் பார்த்து மயங்கறியா? இந்த வீடும் ஆசாரமும் ஏழ்மையும் உனக்கு அன்னியமாப் போயிடுத்தா? அலுத்துப் போச்சா இரண்டு அட்சரம் படிச்சதும்?''

அவனுக்குச் சுரீர் என்று ஆத்திரம்வந்தது. மன்னியின் எதிரில் சின்னப் பிள்ளையை மிரட்டுகிற மாதிரி அதட்டியது அவமானப்படுத்திற்று. தான் என்னவோ காவாலித்தனமாக நடந்து கொண்டாற்போல் அப்பா அதட்டுவதாகப் பட்டது. அப்பாவின் எதிரில் அதிர்ந்து பேசியே பழக்கமில்லாத அவன் தனது சீற்றத்தை அடக்கிக்கொண்டு சொன்னான்.

''நான் எந்த அடாவடித் தனமும் பண்ணல்லே. கண்ட பெண்ணோடேயும் சுத்தல்லே. அவள் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண். தமிழ்ப் பெண். 'ஹவுஸ் காஸ்'லே கிருஷ்ணமூர்த்தின்னு இருக்காரே, அவருடைய பெண்.''

அப்பா திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தார்.

''யாரு, வெங்கடேசய்யர் மாமியோட பேத்தியா?''

''ஆமாம்!''

''உனக்கென்ன புத்தி பிசகிப் போச்சா? அந்தஸ்திலே அவா உச்சாணிக் கொம்பிலே இருக்கா. அவர் வீட்டுப் பெண்ணுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?''

''எனக்கு அவளைப் பிடிக்கிறது. அவளுக்கு என்னைப் பிடித்திருக்கிறது. இரண்டு பேரும் அந்தஸ்தைப் பத்தி நினைச்சுப் பார்க்கல்லே. பிரியம் ஏற்பட்டுப் போச்சு. நான் கல்யாணம் பண்ணிண்டா அவளைத் தான் பண்ணிப்பேன்!''

''கேட்டியா விசாலம்?'' என்றார் சுப்புஸ்வாமி ரௌத்திரத்துடன். ''நீ கொடுத்திருக்கிற இடத்தினாலே திமிர் நிறையவே ஏறியிருக்கு இவனுக்கு. ஏண்டா, உன் கல்யாணம்னா அதிலே நீயும் அந்தப் பெண்ணும் மட்டும் தான் சம்பந்தப்பட்டிருக்கிறதா எண்ணமா? அந்தக் கிருஷ்ணமூர்த்தியும் அவர் பெண்டாட்டியும் மேல் நாட்டு நாகரீகத்திலே மூழ்கியிருக்கிறவா. நம்மாத்து ஆசாரத்துக்கும் அனுஷ்டானத்துக்கும் நிச்சயம் ஒத்து வராத வழக்கங்கள் அவாளுக்கு. உன் கல்யாணத்தைப் பத்தி நீயேதான் தீர்மானம் பண்ணிக்குவேன்னு பண்ணிக்கோ — எனக்கும் உன் விவகாரத்துக்கும் இனிமே சம்பந்தமில்லேன்னு வெச்சுக்கறேன்!''

அவர் விருட்டென்று துண்டைத் தோளில் உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினார். கணேசன் மௌனமாக அவரைப்பின் தொடர்ந்தான். ஒரு கனமான நிசப்தம் வீட்டை அழுத்திற்று. புரியாத காரணங்களினால் ஏற்பட்ட கலவரத்தில் கண்ணிலிருந்து வழிந்த நீரைக் காமாட்சி துடைத்துக் கொண்டிருந்தாள். கோமதி ஒரு வாரப் பத்திரிகையின் பக்கங்களை அவசரமாகப் புரட்டினாள்.




''நான் சித்த கோவிலுக்குப் போயிட்டு வரேன் மன்னி!'' என்று அத்தை கிளம்பினாள். அவளைப் பின் தொடர்ந்து செல்லலாமா என்று ஒரு விநாடி யோசித்து விட்டு அவன் அலுப்புடன் வெளியில் கிளம்பி வேறு திசையில் நடக்க ஆரம்பித்தான். இன்றைக்கு யாரிடமும் எதுவும் பேச முடியும் என்று தோன்றவில்லை.

அப்பாவின் வார்த்தைகள் மிகக் கடுமையாக, கருணையற்றவையாகத் தோன்றின. இவர் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று ஆத்திரம் வந்தது. தன்னை மாதிரியோ கணேசன் மாதிரியோ அவன் இருப்பான் என்று எதிர்பார்க்கிறாரா? அவனுடைய கல்யாணத்தைப் பற்றித் தனிப்பட்ட கருத்துக்கள் வைத்துக் கொள்ள அவனுக்கு உரிமையில்லை என்கிறாரா? கொஞ்சங்கூடப் புரிந்து கொள்ள முயற்சி செய்யாமல் அப்பா முறைத்துக் கொண்டு நின்றால் என்ன செய்வது என்கிற கவலை பகபகவென்று ஜ்வாலையாய்க் கிளம்பிற்று. அவனுக்கே எத்தனை அனுமானங்களும் பயங்களும் இருந்தன! திடுதிப்பென்று திருநாகேச்வரத்துக்குக் கிளம்பிப் போனது தாராவிடமிருந்து தப்பிக்க என்று அப்பாவுக்குப் புரிந்தால் என்ன செய்வார்?

'எனக்கு அதெல்லாம் தெரியாது. நமக்குச் சரிப்பட்டு வராது' என்பார், திரும்பத் திரும்ப.

அவரை மீறிக் கொண்டு அவனால் செயல்பட முடியுமா?—அவரை மீறிக்கொண்டு படித்து முடித்த மாதிரி? குலத்தொழிலை விடுவதற்கும் குல தர்மத்தைப் புறக்கணிப்பதற்கும் வித்தியாசமில்லையா?

அவன் வீட்டிற்குத் திரும்பிய போது ஒரு ஆச்சரியம் காத்திருந்தது.

(தொடரும்)

# கண்கள்...






## இவற்றினால் உணர்வுகளை வெளிப்படுத்துங்கள்

சிரிப்பு. மகிழ்ச்சி. சினம்.
சிருங்காரம். அத்தனையும்
சிறப்பாக எடுத்தியம்ப
முடியும்... சிங்கார் டீலக்ஸ்
கண்மையுண்ட உங்கள்
கண்களால். கருமைப்
பளபளப்பு மிக்கது
சிங்கார்—அடடா! எத்தனை
குளுமை... விசேடமான
தயாரிப்பு சிங்கார்
...ஆகவே அத்தனை
அழகு... கண்களுக்கு
எரிச்சல் இல்லாதது.






**சிங்கார்**

டீலக்ஸ் கண்மை

இது ஒன்றே கண்களுக்கு
நலமான கண்மை.

everest/83/SH/179-tm

# தெய்வம் தீர்த்த கணக்கு

எம்.கே.சங்கரன்

பாலு தன் ஊருக்கு வரும்படி அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். மோகனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எதிர் பாராமல் ஆபீஸ் விஷயமாகத் திருநெல்வேலிக்கு வந்தான். மதியத்துக்குள் வேலைகள் முடிந்து விட்டன. பாலுவின் ஊர் பக்கத்தில் இருப்பது நினைவுக்கு வந்தது. நண்பனைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று திட்டமிட்டான். முப்பது கிலோ மீட்டர் ஒரு பஸ்ஸிலும் பத்து கிலோ மீட்டர் இன்னொரு பஸ்ஸிலும் போக வேண்டியிருந்தது.

ஒரு மணிக்கு பஸ் ஏறினான். இரண்டரை மணிக்கு ஓர் ஊரில் இறங்கி அடுத்த பஸ்ஸுக்கு ஒரு மணி நேரம் காத்து நின்றான். அந்தப் பஸ் வந்து, போய்ச் சேர நான்கு மணி ஆயிற்று. ஆள் அரவமே இல்லாத காட்டில் தன்னந் தனியாக அவனை இறக்கி விட்டுப் பஸ் போய் விட்டது.

நாலா பக்கமும் பார்வையைச் செலுத்தினான். எந்தப் பக்கம் நோக்கினும் ஒரு மைலுக்கு அப்பால்தான் ஊர்கள் தென்பட்டன. எந்தத் திசை செல்வது... நல்ல வேளையாக சைக்கிளில் ஒருவன் வரவும் அவனை விசாரித்தான். அவன் திசை காட்டி 'ஒன்றரை மைல் நடக்கணும்' என்று சொல்லி விட்டுச் சென்றான்.

மோகன் ஹாண்ட் பாக்கைத் தூக்கிக் கொண்டு ஒற்றையடிப் பாதையில் நடந்தான். சிறிது தூரம் பொட்டல், காட்டு ஓடை ஒன்று குறுக்கிட்டது. ஊர் நெருங்கிவிட்டது. உடம்பு கசகசத்தது. நடந்து வந்த களைப்பால் ஒரு தோட்டத்தருகில் நின்றான். வாழை கரும் பச்சை நிறத்தில். மிளகாய்ப் பாத்திகளாய்த் தோட்டம் செழிப்பாக இருந்தது. மின்சார பம்பு கிணற்றிலிருந்து நீரை இழுத்து அருவியாய்க் கொட்டிக் கொண்டிருந்தது.

அங்கே.....

குழாயிலிருந்து பீறிட்டு வரும் நீரில் தலையைக் கொடுத்துச் சுகமாகக் குளித்துக் கொண்டிருந்தாள் ரஞ்சிதம். மோகன் திரும்பிப் போக யத்தனித்தான். ரஞ்சிதம் அவனைக் கண்டு விட்டாள். தண்ணீரை விட்டு வெளியே வந்து ''நில்லுங்கள்'' என்றாள்.

ஈரப் புடவையில் மாராப்புக் கட்டி நின்ற அவள் தோற்றம் அவனைச் சிலிர்க்க வைத்தது. இருபது வயசிருக்கும். வளர்த்தி. கறுப்பென்றும் சிவப்பென்றும் சொல்ல முடியாத வெளிர் நிறம், செழிப்பான உடற் கட்டு. நீர்த் திவலைகள் அவள் தோள்களிலும் கைகளிலும் முத்து முத்தாய் ஒளிர்ந்து நின்றன. உடம்பில் ஒரு சோபை.

''குளிக்க வந்தீகளா? நான் குளிச்சுட்டேன். நீங்க குளிக்கலாம்'' அனுமதியளித்தது போலச் சொன்னாள் ரஞ்சிதம்.

தலையைத் துவட்டிக் கூந்தலோடு துணியையும் சேர்த்து முறுக்கிக் கொண்டையாகப் போட்டுக் கொண்டிருந்தாள். மோகன் சட்டை, பனியனைக் கழற்றி விட்டுத் தயங்கி நின்றான்.

''பொட்டப் புள்ள மாதிரி வெக்கப் படதீகளே! எங்க ஊர்ப் பையனுக கோமணத்தோடு குளிப்பானுக. எங்களுக்கெல்லாம் இது சாதாரணம். இந்தாங்க வாசனைச் சோப்பு. நல்லாத் தேய்ச்சுக் குளியுங்க.''

ரஞ்சிதம் தள்ளிச் சென்று ஈரச் சேலையைப் பிழிந்து கட்ட ஆரம்பித்தாள். மோகன் குளித்து விட்டு டிரஸ் அணிந்து கொண்டு வந்தான். பாண்டும் சட்டையுமாய் ஜம்மென்றிருந்தான்.

''பெரிய ஆபீஸர் மாதிரி இருக்கீக. யார் வீட்டுக்கு வாரீக?''

''இந்த ஊர்ல பாலுன்னு என் சிநேகிதன். நானும் அவனும் பாளையங்கோட்டையில் ஒன்றாய்ப் படிச்சோம். அவனைப் பார்க்க வந்தேன்.''

''அவுக என் அத்தான்தான். எனக்கு அத்தை மகன். என் கூட வாங்க. வீட்டைக் காட்டறேன்.''

ஈரத் துணிகளைத் தோளில் போட்டுக் கொண்டு அவள் நடந்தாள். மோகன் பின் சென்றான்.

''நீங்க என்ன செய்யரீக?''

''திருச்சியில் பெரிய கம்பெனியில் உதவி மானேஜராக இருக்கேன். ஆயிரத்தைந்நூறு ரூபா சம்பளம்.''

''ஆயிரத்தைந்நூறு! எங்க அத்தானும் இருக்கே! படிச்சு என்ன பிரயோசனம்? ஆம்பிளையா இருந்தா உங்களை மாதிரி வேலை பார்த்தாத்தானே லட்சணம்?''

''பாலு வேலைக்கு டிரை பண்ணலியா?''

''பணக்கார வீட்டுப் பிள்ளை. ஊரைச் சுத்திக்கிட்டு அலையுது!''

இருட்டி விட்டது. அவள் வீடு ஊர் ஆரம்பத்தில் இருந்தது.

''இதுதான் எங்க வீடு. உள்ளே வாங்க. சேலை மாத்திக்கிட்டு வந்துடறேன்.''

பருவச் சுடராய் ஒளி வீசிக் கொண்டிருந்த அவள் நாட்டுப்புறப் பாணியில் சேலை கட்டி வந்து நின்றதும் வேறுவாக மாறிப்போனாள்.

நீண்டு அழகாய்க் காட்சி யளித்த கூந்தலை அள்ளிச் செருகி யிருந்தாள்.

அவள் அம்மா வந்தாள். நாற்பது வயதிருக்கும். வெள்ளைச் சேலை கட்டியிருந்தாள்.

''அம்மா, இவுக பாலத்தானுக்குச் சிநேகிதரு. திருச்சிலேர்ந்து அத்தானைத் தேடி வந்திருக்காரு.''

அவள் அன்னையிடம் விவரம் கேட்டுத் தெரிந்து கொண்டு நண்பனின் வீட்டை அடைந்தான்.

**வா**சலில் ஓர் இளம் பெண் நின்று கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும் ஒரே ஓட்டமாக வீட்டுக்குள் ஓடிப்போய், ஒரு கிழவியை அனுப்பினாள்.

''பாலுவும் அவன் அப்பா அம்மாவும் வெளியூர் போயிருக்காங்க. சமைஞ்ச பொண்ணுதான் வீட்ல இருக்கு. நாளைக்கு வந்தாப் பார்க்கலாம்'' என்று சொல்லிக் கிழவி கதவை அடைத்துக் கொண்டாள்.

மோகன் திணறிப் போனான். ராத்திரியாகி விட்டது. இந்தப் பட்டிக்காட்டில் எங்கே தங்குவது?... யோசனை செய்தவாறு ரஞ்சிதத்தின் வீட்டருகில் வந்தான். வாசலில் ரஞ்சிதம் நின்று கொண்டிருந்தாள்.

''அத்தானைப் பார்த்தீங்களா?''

''அவங்க வீட்டில எல்லோருமே வெளியூர் போயிருக்காங்க. நாளைக்குத்தான் வருவாங்களாம்.''

''அடப் பாவமே! என்ன செய்யப் போறீங்க?''

''அதுதான் தெரியலே. ஊருக்குப் போறதுன்னாலும் முடியாது.''

''எங்க வீட்ல அழகான முன் கூடம் இருக்கு. நீங்க தங்கிக்கலாம்.''

வெகுளித்தனமாகச் சொல்கிறாள். சாத்தியப்படுமா?

''அம்மா, பாலத்தான் வீட்ல ஒருவரும் இல்லையாம். அந்த ஆளைப் பார்த்தா பாவமா இருக்கு. நம்ம வீட்டுக் கூடத்தில் தங்கிக்கிடட்டும். நம்ம சொந்தக்காரங்களைத் தேடி வந்தவங்களை நாம்தானே உபசரித்து நடத்தணும்?'' என்று தாயிடம் போய்ச் சொன்னாள்.

அந்த அம்மாள் யோசனை செய்தாள். வெளிக் கூடம்தானே என்று சமாதானப் படுத்திக் கொண்டு 'சரி' என்றாள்.

''அந்தப் புள்ளை சாப்பிட்டுதோ என்னவோ?''

''எப்படிம்மா சாப்பிட்டிருக்க முடியும்? உப்புமாக் கிண்டி காப்பி போடறேன்.''

ரஞ்சிதம் கூடத்தில் பாய் விரித்தாள். அதற்கு மேல் ஜமக்காளம், தலையணையும் போர்வையும் கொண்டு வந்தாள். மோகன் படுத்துக் கொள்ளப் போனான்.

''அதுக்குள்ள படுக்கலாமா? சாப்பிட்டு விட்டுத்தான் படுக்கணும்.''

''படுக்க இடம் தந்ததே பெரிசு. சாப்பாடு வேறயா?''

''ஒரு ஆளைப் பட்டினி போடற மனசு எங்களுக்குக் கிடையாது.''

ரஞ்சிதம் அவனைச் சாப்பிட வைத்துவிட்டாள். அவள் தாய் குடும்ப விஷயங்களை மோகனிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.



'எங்க ரஞ்சிதத்தோட அப்பா இறந்து நாலு வருஷமாச்சு. ஒரு புண்ணியவான் எங்க தோட்டத்தைப் பயிர் வைச்சு வேண்டியதைத் தர்றதால் நாங்க ரெண்டு பேரும் காலம் கழிக்க முடியுது. பாலு எங்க ரஞ்சிதத்துக்கு மொறை மாப்பிள்ளை. காலா காலத்தில் கல்யாணம் வச்சுடலாம்னு பார்த்தேன். பாலுவோட அம்மாவுக்குப் பெரிய பணக்காரின்னு நெனைப்பு. அம்பது பவுன் நகை போட முடியுமான்னு கேக்குறா. எங்க கிட்ட இருக்கிறதே அஞ்சு பவுன்தான். சம்மதிக்க மாட்டேங்கறா. கல்யாணப் பேச்சு அப்படியே நிக்குது.''

தாய் கவலையோடு பேசியதும் ரஞ்சிதம் குறுக்கிட்டாள்.

''அவுங்க என்னை எடுக்காட்டிப் போறாங்க. எனக்கு மாப்பிள்ளையா கிடைக்காது? சும்மா இதையே பேசிக்கிட்டிருக்காதே'' என்றாள்.

**வி**டிந்து மோகன் கண் விழித்ததும் பாலு வந்துவிட்ட செய்தியைச் சொன்னாள் ரஞ்சிதம். மோகன் பாலுவைச் சந்தித்தான். பாலு ஆவலோடு மோகன் கைகளைப் பற்றிக் குலுக்கினான். பாலுவின் அப்பாவும் அம்மாவும் அமர்க்களமாக உபசரித்தார்கள். ராஜ உபசாரம்தான்.

''மோகன் நேத்தே வந்திருக்கே, எங்கே தங்கினே?'' என்று கேட்டான் பாலு.

''உன் மாமா மகள் ரஞ்சிதத்தின் வீட்டில்தான். நல்ல பொண்ணு. நான் உன் சிநேகிதன்னு தெரிஞ்சதும் எவ்வளவு உபசரிச்சா தெரியுமா?''

''ஏன் உபசரிக்க மாட்டாள்? அந்தப் பங்கரையை என் தலையில் கட்டணும்னு தாயும் மகளும் காக்கா பிடிச்சிருப்பா!''

''என்ன பாலு இப்படிச் சொல்றே! ரஞ்சிதத்துக்கு என்ன குறைச்சல்?''

''கொஞ்சமாவது கிளாமர் வேண்டாமா? மசன்ஸி துளிக்கூடக் கிடையாது. அவளும் அவள் சேலைக் கட்டும்... எனக்குப் பிடிக்கலே. நேத்து நாங்க வெளியூர் போனது எனக்குப் பெண் பார்க்கத்தான். அறுபது பவுன் போடறாங்க. எப்படிப்பட்ட பெண் தெரியுமா? அதே செட்டில் ஆயிடுச்சு.''

ரஞ்சிதத்திடம் புதைந்து கிடக்கும் இயற்கை அழகைப் பாலுவால் பார்க்க முடியவில்லை. மோகனுக்கு அது பளிச்சென்று தெரிந்தது.

சாப்பாட்டுக்குப் பின் மோகன் மெதுவாக ''ஒரு உதவி செய்யணும், பாலு. ரஞ்சிதத்தை நான் கல்யாணம்பண்ணிக்கலாம்னு நினைக்கிறேன்'' என்றான்.

பாலு திடுக்கிட்டான்.

''மோகன், உன் பொஸிஷன் ஸ்டேட்டசுக்கு இவள்.....''

''மோகன், நீங்க எங்க பாலுவோட சிநேகிதனா இருக்கிறதால் சொல்றேன். அந்த ரஞ்சிதம் உங்களுக்கு வேண்டாம்'' என்றார் பாலுவின் அப்பா.

அவன் அம்மா, ''ரஞ்சிதத்தை என்னோட அண்ணன் மகள்னு சொல்றதுக்கே கூசுது. அது வெறும் கழிசடை!'' என்றாள்.

''மோகன், ரஞ்சிதத்தோட வெகுளித்தனத்தைப் புரிஞ்சிருப்பே. டவுன்லேருந்து ஒரு பய பஞ்சாயத்து ஆபீஸ்ல வேலை பார்த்துக்கிட்டிருந்தான். ரஞ்சிதம் உன் கிட்டப் பழகின மாதிரி அவன் கிட்டப் பல்லே இளிச்சிருக்காள். அவள் வெகுளித்தனத்தை அந்தப் பய யூஸ் பண்ணிட்டான்'' என்றான் பாலு.

''ஒரு நாள் பாலுவோட அப்பா சோளக் காட்டுக்குள்ளே அவங்க ரெண்டு பேத்தையும் கையும் களவுமாக் கண்டுக்கிட்டாரு. பஞ்சாயத்து ஆபீஸ் பய ஓடிட்டான். ரஞ்சிதத்தை இழுத்துக்கிட்டு வந்தார். வெளியே தெரியாம அமுக்கிட்டோம். அதனால்தான் எங்க பாலுவுக்கு அவள் வேண்டாம்னு நானே சொல்லிட்டேன்.''

மோகன் விக்கித்துப் போனான்.

**தி**ருச்சிக்கு வந்த பின்னும் ரஞ்சிதத்தின் குழந்தைத்தனமான பேச்சும் சிரிப்பும் மோகனின் நெஞ்சில் ஆடிக் கொண்டிருந்தன. ரயில் சிநேகம் போல்தான் என்று மனத்தை ஆறுதல் படுத்திக் கொண்டான்.

பாலு கல்யாணத்துக்கு அழைப்பு அனுப்பிக் கட்டாயம் வரணும் என்று உத்தரவு போட்டிருந்தான். மோகன் கல்யாணத்துக்குப் போனான். ரஞ்சிதத்தின் வீட்டைத் தாண்டிச் செல்லும்போது மோகன் மனசில் அரிப்பு.

முகூர்த்தம் முடிந்ததும் பாலு மோகனிடம் பேசிக் கொண்டிருந்தான். ''என் கல்யாணம் முடிந்தது. இனி என் சிஸ்டர் கல்யாணம்தான்'' என்றவன், ''மோகன், எனக்கொரு ஆசை. என் தங்கை கருணாவை நீ பார்த்திருக்கியா?'' என்று கேட்டான். ''மோகன், நீ என் மச்சினன் ஆகணும்னு பிரியப்படறேன். என் அப்பா அம்மாவுக்கும் அதுதான் ஆசை. என்ன சொல்றே?''

பாலுவின் தங்கை கருணா கல்யாண வீட்டில் அடிக்கடி கண்ணில் பட்டிருந்தாள். ரஞ்சிதத்தின் சாயல்தான். பூசினாற்போல் உடம்பு,



ரஞ்சிதம் காட்டு மலர் என்றால் சுகுணா பல வர்ணங்கள் கொண்ட கதம்பம். வசதியான வீட்டுப் பெண் என்பதால் தோரணையோடு எடுப்பாக இருந்தாள்.

மோகனால் மறுக்க முடியவில்லை. ''அப்பாவுடன் கலந்து முறைப்படி பெண் கேட்க வருகிறேன்'' என்றான்.

மோகன் ஊருக்கு வரும்போது ரஞ்சிதத்தின் கண்களில் பட்டு விட்டான்.

''வாங்க. பாலு அத்தான் கல்யாணத்துக்கு வந்தீகளா?'' என்று கேட்டாள்.

அவனைக் கண்டு ரஞ்சிதத்தின் தாய் ஓடி வந்தாள்.

''பார்த்தீகளா தம்பி இந்த அநியாயத்தை...'' என்று பொரிய ஆரம்பித்தாள்.

''சும்மா இரம்மா. கிடைக்காதது கை விட்டுப் போன மாதிரி புலம்பறே. எனக்குன்னு ஒருவர் எங்காவது பிறந்திருப்பார்'' என்றாள் ரஞ்சிதம்.

''தம்பி, சுகுணாவை உங்களுக்குப் பேசறதாக் கேள்விப் பட்டேனே! அவ பெரிய ராங்கிக்காரில்ல....'' தாய் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

''அம்மா, உன் வாய் சும்மாவே இருக்காது. அவங்க பெண் எடுக்காட்டிப்போறாங்க. நீ வாயை மூடிக்கிட்டுச் சும்மா இரு'' என்று தாயை அடக்கினாள்.

''சுகுணா பத்து வரை படிச்சிருக்கா. உங்களுக்கு நல்ல பொருத்தம்!''

பெண் எடுக்கவில்லை என்ற மனஸ்தாபத்தால் பாலுவின் கல்யாணத்துக்கு வரவில்லை. எவ்வளவு தன்னடக்கமாகப் பேசுகிறாள் ரஞ்சிதம்!

**ஆ**பீஸ் நெருக்கடியில் மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. மோகனின் கல்யாணப் பேச்சு எழுந்தது. சுகுணாவைப் பற்றித் தாய் தந்தையரிடம் சொன்னான்.

பாலுவுக்குக் கடிதம் எழுதிப் போட்டுவிட்டு பெண் பார்த்து முடிவு செய்யப் பெற்றோருடன் புறப்பட்டான். திருநெல்வேலியில் இறங்கி டாக்சி பிடித்துக் கிராமம் சென்றனர். பாலுவின் வீடு அடைத்துக் கிடந்தது. மோகன் குழம்பி நின்றான். அவன் எழுதிய கடிதம் அளிக் கம்பிகளுக்குள் அனாதையாகக் கிடப்பது கண்ணில் பட்டது.

காரைக் கண்டதும் ஒருவன் ஓடிவந்தான். பாலுவின் வீட்டில் வேலை பார்த்தவன். மோகன் அவனிடம் விசாரித்தான்.

''உங்களுக்குத் தெரியாதா? பாலுவோட தங்கச்சி சுகுணா பஞ்சாயத்து ஆபீஸ் ஆள் கூட ஓடிப்போயிட்டா!'' என்றான்.

திடுக்கிட்டான் மோகன்.

''சுகுணாவுக்கும் பஞ்சாயத்து ஆபீஸ் ஆளுக்கும் ரொம்ப நாளாவே சிநேகிதம். ரெண்டுபேரும் கள்ளத் தனமா பேசிக்கிட்டிருக்கிறதை நான் எத்தனையோ தடவை பார்த்திருக்கேன். ஒரு நாள் சோளக்காட்டுப் பக்கம் போய்க் கிட்டிருந்தேன். சோளக் காட்டுக்குள் சுகுணா நுழைஞ்ச மாதிரி தெரிஞ்சுது. கொஞ்ச நேரம் கழிச்சு எங்கிருந்தோ அந்தப் பஞ்சாயத்து ஆபீஸ் ஆசாமி வந்துட்டான். அக்கம் பக்கம் பார்த்துட்டுச் சுகுணா பின்னால் போனான். பெரிய இடத்துச் சங்கதி. என்ன செய்யறதுன்னே தெரியல. அந்தச் சமயம் ரஞ்சிதம் குளிக்க வந்துக்கிட்டிருந்தா. அவகிட்டச் சொன்னேன். ரஞ்சிதம் பளிச்சுன்னு சோளக் காட்டுக்குள்ளே ஓடினா. எக்கச்சக்கமா அவங்களைப் பார்த்துட்டா. ''கொள்ளைல போவான். பேதியில் போவான். விளங்குவியா'ன்னு சத்தம் போட்டா. அந்தப் பய ஓடிட்டான். ரஞ்சிதம் சுகுணாவை இழுத்துக்கிட்டுப் போய் அவ தாய்க்கிட்ட ஒப்படைச்சா. இதை யார் கிட்டயும் சொல்லிடாதேன்னு என் கிட்ட சொல்லி வச்சது அந்தத் தங்கமான பொண். சுகுணாவை உங்க தலைல கட்டித் தூரமா அனுப்பிடணும்னு முடிவு பண்ணி உங்களுக்குக் கடுதாசி மேல் கடுதாசி போட்டாங்க. உங்க நல்ல காலம், தெய்வமாப் பார்த்து நீங்க வர்ற வழியில் ரஞ்சிதத்தை உங்க கண்ணில காட்டியிருக்கு. நீங்க ரஞ்சிதத்தை முடிச்சு வையின்னு கேட்டீங்க. அந்தப் படுபாவிங்க மானத்தைக் காப்பாத்தினவங்கிற நன்றி கூட இல்லாமல் கதையை மாத்தி ரஞ்சிதத்தின் மேல் அபாண்டமா பழி சுமத்தி உங்க மனசை மாத்திட்டாங்க. எதேச்சையா கேட்டுக்கிட்டிருந்த என் மனசு கொதிச்சுது. ஆனா கடவுள் ஒருவர் பார்த்துக்கிட்டிருக்கார்என்கிறதைமறந்துட்டாங்க. சுகுணா யாருக்கும் தெரியாமல் தன் காதலனுக்கு லட்டர் எழுதி வரவழைச்சு அவன் கூட ஓடிட்டா!''


டாக்டர்: தினமும் ஒருவேளை [illegible] கஞ்சிதான் குடிக்க வேண்டும்!
நோயாளி: எத்தனை நாளைக்கு டாக்டர்?
டாக்டர்: என்னுடைய பில் தொகையைக் கொடுத்து முடிக்கும்வரை!
-கே. கணேஷ்.

தன்னடக்கமான ரஞ்சிதத்தின் குழந்தை முகம் மோகனின் நெஞ்சில் பிரசன்னமானது.

காரில் ஏறினான்.

''அப்பா, நம்ம குடும்பத்துக்குப் பொருத்தமான ஒரு பெண் இந்த ஊரிலயே இருக்கு. வாங்க போகலாம்.''

கார் ரஞ்சிதத்தின் வீட்டுக்கு முன் நின்றது. அதிர்ஷ்டம் ரஞ்சிதத்துக்குக் கட்டியம் கூறிக் கொண்டிருந்தது!

# ராதிகாவை சினிமாவுக்கு அனுப்புங்கள்

அயர்ன் பண்ணின கராத்தே ஆடைகளைப் பிளாஸ்டிக் பையில் திணித்துக்கொண்டு காரச் சட்னி, இட்லியை வயிற்றுக்குள் திணித்துக் கொண்டு, புது டப்பா மை முழுவதையும் கண்ணுக்குத் திணித்துக்கொண்டு ஆர்வமும், அவசரமுமாக ராதிகா புறப்பட ஆயத்தமானபோது, சுவாமிநாதன் வந்து அத்தனையும் கெடுத்தார்.

''ராதிகா... இன்று உன் கராத்தேயைப் பார்க்க நானும் வரப் போகிறேன்.''

சப்த நாடிகளும் அடங்கிப் போயிற்று ராதிகாவுக்கு. ''நீங்களுமா?''

''ஆமாம்... ஏன்?''

''ஆங்... ஒன்றுமில்லை.''

'கராத்தே க்ளாஸைக் கட் பண்ணிட்டு வா. காலைக் காட்சி டார்லிங் பார்க்கலாம். கராத்தே முடியற நேரத்துக்கு ஷோ முடிந்து விடும். யாருக்கும் தெரியாமல் வீட்டுக்குத் திரும்பிடலாம்' என்று சொல்லி இருந்தான், பிரபாகர். கோ-எஜுகேஷன் பிளஸ்-டூவில் கோ-ஸ்டூடண்ட் அவன். ராதிகாவின் உதறலுக்குக் காரணம் அதுதான்.

''இன்றைக்கு ஒண்ணும் ஸ்பெஷல் பிராக்டீஸ் இல்லேப்பா. எப்போதும் போல் எக்சர்சைஸ்தான். அடுத்த வாரம்தான் 'ஃபைட்' சொல்லித் தருவார்'' என்று அப்பாவைத் தடுத்துப் பார்த்தாள் ராதிகா.

''பரவாயில்லை அம்மா. இன்றைக்கு ஞாயிற்றுக் கிழமைதான். சினி, மண்ணெண்ணெய் என்று கியூவில் நிற்கிற பிரச்னை ஏதும் இல்லை.''

மெல்லவும் முடியவில்லை விழுங்கவும் முடியவில்லை, ராதிகாவுக்கு. அவளை எதிர் பார்த்துத் தியேட்டரில் காத்திருப்பான் பிரபாகர்.

''சரி, அப்பா.'' சரிந்த கட்டடம் போல் உடைந்த குரல்.

தந்தையும் மகளும் புறப்பட்டனர்.

கொஞ்ச நேரம்.

பக்கத்து வீட்டுச் சிறுமி ஓடி வந்தாள்.

''மாமி... எங்கள் வீட்டு போனில் ராதிகா அக்காவை யாரோ போனில் கூப்பிடுகிறார்கள்'' என்றாள்.

சிவகாமி போய்க் கேட்டாள்: ''ராதிகாவின் அம்மா பேசுகிறேன். யார் பேசுகிறது?''

''ராதிகாவின் ஃப்ரெண்ட் மாலதி பேசுறேன்.''

''என்ன விஷயம்?''

''ராதிகா இன்று மார்னிங் ஷோ சினிமாவுக்கு வருவதாகச் சொன்னாள். அவள் வருவாள் என்று காலை எட்டு மணிக்கே வந்து அவளுக்கும் சேர்த்து டிக்கெட் ரிசர்வ் பண்ணிட்டேன். லீவு நாள். கூட்டம் அதிகம் இருக்கும். ராதிகா கொஞ்சம் முன்னதாக வந்தால் வசதியாய் இடம் பார்த்து உட்கார்ந்து கொள்ளலாம் என்று அதைச்சொல்லத்தான்போன்பண்ணினேன்''

பேசும் குழலை அரையும் குறையுமாக நகர்த்திக் கொண்டு, ''சினிமாவுக்கா?... ராதிகா அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே'' என்று முணு முணுத்தாள், சிவகாமி.

''என்ன மாமி சொன்னீங்க?''

''ஒன்றுமில்லேம்மா. ராதிகாவிடம் சொல்லிச் சீக்கிரம் வரச் சொல்லணும். அவ்வளவு தானே.''

''அவ்வளவுதான். வெரி கைண்ட் ஆஃப் யூ, ஆண்ட்டி.''

மறு முனையில் பொங்கிய மகிழ்வையும் மரியாதையையும் எண்ணி அசை போட்டுக் கொண்டே வீட்டுக்குத் திரும்பினாள் சிவகாமி.

ராதிகா அப்பாவின் சைக்கிள் பின்னால் போய்விட்டாள் ஆகலால் ராதிகாவின் சைக்கிள் வாசலில் நின்றது.

சிவகாமி அதை எடுத்துக் கொண்டு விரைந்தாள்.

மண் தரையில் பூத்த வெண் தாமரை போல் கராத்தே வகுப்பு வீராங்கனைகள் பயிற்சியில் ஈடுபட்டிருந்தனர்.

மாஸ்டரை அணுகி, ''ராதிகாவின் பாட்டிக்கு உடம்புக்கு முடியவில்லை என்று தந்தி வந்திருக்கிறது. கூட்டிப் போக வேண்டும்'' என்றாள், சிவகாமி.

''மிஸ் ராதிகா... நீங்கள் போகலாம். காட் பிளஸ் யுவர் கிராண்ட்மா'' என்று கனிவுடன் ராதிகாவை அப்புறப்படுத்தினார் மாஸ்டர்.

அதற்குள் எட்டத்தில் உட்கார்ந்திருந்த சுவாமிநாதன் எழுந்தோடி வர, மைதானத்தை விட்டு மூவரும் வெளியில் வந்தனர்.

''எப்போது தந்தி வந்தது?'' என்று பதறினார் சுவாமிநாதன்.

''பதறாதீர்கள். தந்தியும் இல்லை, வீணையும் இல்லை'' என்று கணவனை இளமுறுவலுடன் கையமர்த்திவிட்டு, மகளை நோக்கிய சிவகாமி ''ராதிகா... வாழ்க்கையிலே வாக்குறுதி ரொம்பவும் முக்கியம்மா. பெற்ற குழந்தையைப் போல அதைக் காப்பாற்றணும். சிறு பிராயத்திலேயே அதற்கு முக்கியத்துவம் கொடுத்தால்தான் வயதான பிறகும் அதே பழக்கம் வரும்'' என்றாள்.

ராதிகா ஏதும் புரியாமல் விழித்தாள்.

''உன் சிநேகிதி மாலதியிடம் இன்று சினிமாவுக்கு வருவதாகச் சொல்லிவிட்டு நீபாட்டுக்கு கராத்தே கிளாஸுக்கு வந்துட்டியே. நீ போகலேன்னா அந்தப் பொண் உன்னைப் பற்றி என்ன நினைப்பாள்?''

''அம்மா....''

''கராத்தே வகுப்பைப் பெரிது படுத்தாமல் சினிமாவுக்குப் போவதா, வேண்டாமா என்பது வேறு விஷயம். ஆனால், சினிமாவுக்கு வருவதாக ஒப்புக் கொண்ட பிறகு போகாமல் இருக்கக் கூடாது. உனக்காக அந்தப்

பெண் டிக்கட் எடுத்து வைத்துக் கொண்டு எட்டு மணியிலிருந்தே தியேட்டரில் வெயிட் பண்ணிக் கொண்டிருக்கிறாள்.''

''பூ... இதுக்குத்தானா'' என்று புன்னகைத்தார் சுவாமிநாதன்.

''ஆமாங்க. கராத்தே வகுப்பை விட்டு வரணும்னு அவசர காரணம் ஏதாவது வேண்டுமே. அதற்குத்தான் அப்படிச் சொன்னேன். வாருங்கள் வீட்டுக்குப் போகலாம்'' என்று கணவனின் சைக்கிள் பின்புறம் ஏறிக்கொண்டாள் சிவகாமி.

ராதிகாவின் சைக்கிள் திசை மாறிப் புறப்பட்டது.

தியேட்டர் வாசலில் ஏகக் கூட்டம்.

''வந்துட்டாயா, ராது'' என்று குதித்தான் பிரபாகர்.

''எனக்குத் தெரியும். நீதான் பெண் மாதிரி குரலை மாற்றிப் பேசியிருப்பாய்'' என்றாள் ராதிகா. ''இருந்தாலும் உனக்குள்ள தைரியம் யாருக்கும் வராது பிரபாகர்.''

''தாங்க்ஸ் ராது. 'மிமிக்ரி' கற்றுக் கொண்டு நான் பெற்ற முதல் வெற்றி இது தான்.''

''உண்மைதான். ஆனால், இந்த வெற்றியை நான் வேறு விதமாக நினைக்கிறேன்.''

''எப்படி?''

''நீ மிமிக்ரியில் அப்படிப் பேசலேன்னா என் அம்மாவைப் பற்றியோ, ஒரு தாய்—மகளுக்கான தாத்பரியம் பற்றியோ எனக்கு ஒன்றுமே புரிந்திருக்காது.''

பிரபாகர் விழித்தான். ''நீ என்ன சொல்கிறாய், ராது?''

''கராத்தே வகுப்பைக் கட் பண்ணிட்டு சினிமாவுக்குப் போவது முறையற்றது என்றாலும் அது பரவாயில்லே. சொன்ன சொல் தவறிவிட்டால் தன் மகளுடைய மதிப்பும், கௌரவமும் ஃபூவாயிலாயிடும். அதைக் கட்டிக் காப்பதும் ஒரு தாயின் கடமைதான்... அப்படின்னு உன் குரலை அப்படியே உண்மை என்று நம்பி என்னைச் சினிமாவுக்கு அனுப்பி வைத்தாளே என் அம்மா, அவளுக்குத்தான் என்மீதும், என் சிநேகிதிகள் மீதும் எத்தனை நம்பிக்கை. அத்தனை நம்பிக்கை விசுவாசமுள்ள என் தாய்க்கு நான் துரோகம் செய்தால் அது மாபெரும் பாவம் இல்லையா, பிரபாகர்! கொடுத்த வாக்கை மீறுவதே தப்பு என்று நினைக்கும் என் அன்னையின் உள்ளம், இப்படி உன்னுடன் சினிமாவுக்கு வருவது தெரிந்தால் எத்தனை புண்படும்...?''

''ஸோ?''

''என்னை மன்னித்துவிடு. எத்தனையோ பேர் டிக்கட் கிடைக்காமல் ஏமாந்து நிற்கிறார்கள். எனக்காக வாங்கிய டிக்கட்டை யாரிடமாவது விற்றுவிட்டு நீமட்டும் சினிமாவுக்குப் போய் வா. ஸீ...யூ...'' என்று கையாட்டினாள், ராதிகா.

மறு விநாடி—

அவளது சைக்கிள் தியேட்டர் காம்பவுண்டை விட்டு மிக வேகமாக வெளியேறியது.

டபுள் செஞ்சுரி - நாட் அவுட்!



விளிம்பில் சற்றே நகர்ந்த சந்திரன் நட்சத்திரத் தோழிகளை விசாரித்து வரக் கிளம்புகிற நேரம். பாம்குரோவ் புல்வெளி. கலாசாகர் ஏற்பாடு. மைக்கிலே மாற்றி மாற்றிப் பாராட்டுகளைப் பலர் வீசத் தலை குனிந்து ஒரு சின்னப் புன்முறுவலும் நிறைய அடக்கமுமாய் வாங்கி வாங்கிப் புடவையில் முடிந்து கொண்டிருந்தார் ஓர் ஐந்து மொழி நட்சத்திரம்.

சாரதா!

ஊர்வசி விருதை மூன்று முறை கௌரவித்த ஒரே நடிகை.

அந்த அடக்கம்: மரியாதையான புன்முறுவல். இவைதான் இந்த இருபத்திரண்டு வருடங்களிலும் துணை நின்று இரண்டு நூறுகளைக் கடக்க உதவியிருக்கின்றன.

**ஸ்கோர் போர்ட்**

| | | |
|---|---|---|
| மலையாளம் | — | 115 |
| தெலுங்கு | — | 68 |
| தமிழ் | — | 12 |
| ஹிந்தி | — | 4 |
| கன்னடம் | — | 1 |
| | | 200 |

—ஜெய மன்மதன்

# புலிக்குட்டியிடம் மாட்டிக் கொண்டேன்

சாலிக்கிராமத்தில் வசிக்கும் புலிக்குட்டி கோவிந்தராஜன் ''சிறுத்தையும் சிறுவனும்'' என்ற படத்தைத் தயாரித்து வருகிறார்.

இது பற்றி விசாரிக்க அவர் வீட்டுக்குப் போனேன். வசமாக மாட்டிக் கொண்டேன்!

கோவிந்தராஜன் பல்வேறு மிருகங்களைத் தமது வீட்டில் வளர்த்து வருகிறார். அவர் தமது மேதா விலாசத்தைக் காட்ட அவசரம் அவசரமாக ஒரு கூண்டைத் திறந்துவிட்டார்!

கரடிக் குட்டி!

கறுப்புக் கலர் பாண்ட் போட்டிருந்த என்னை அக்கரடிக் குட்டி மோப்பமிட்டு முத்தம் கொடுத்தவுடன் பாதி உயிர் போய் விட்டது!

''இது எங்க வீட்டுப் பிள்ளை மாதிரி— ஒன்றும் பண்ணாது பயப்படாதீங்க'' என்று கோவிந்தராஜன் சொல்லும்போதே அந்தக் கரடிக் குட்டி என் பாண்டைக் கடிக்க ஆரம்பித்து விட்டது!

''எனக்கு மிருகம் என்றால் அலர்ஜி— இதை உடனே அப்புறப்படுத்துங்க'' என்று அழாக் குறையாகச் சொன்னேன்.

நாங்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த அறையின் மூலையிலிருந்து இரண்டு மூன்று நாகப் பாம்புகள் நெளிவது தெரிந்தது. தண்ணீர்ப் பாம்பென்றாலே பயந்து ஓடும் சுபாவமுள்ள நான் கால்களை நாற்காலிக்குள் சப்பணமிட்டு உட்கார்ந்தபோது புலிக்குட்டி கோவிந்தராஜன் வாய் விட்டுச் சிரித்தார்.

விறுவிறுவென்று ஒரு கூண்டுக்குள் கையை விட்டார். கொத்தாகப் பல பாம்புகள்!

''இதுக்குப் பெயர் கங்காதரி — ஈஸ்வரனின் ஜடாமுடியில் இருக்கும் பாம்பு. ரிஷிகேஷில் பிடிச்சேன். எப்படி இருக்கு?'' என்றார்.

ஜமக்காள டிசைனில் அந்தப் பாம்புகள் புள்ளி புள்ளியாக அழகாக இருந்தன.

''இந்தப் பாம்பு ரகம் இந்தியாவிலேயே எங்கேயும் கிடையாது. பயங்கரமான விஷமுள்ள பாம்பு. இது கடித்தால் பதினெட்டே மணி நேரத்தில் ஆள் அவுட் உத்தரவாதம்! மரப் பல்லிதான் இதற்கு ஆகாரம்'' என்றார்.

''சரி — நீங்க மிருகங்களைப் பழக்குவதில் எக்ஸ்பர்ட்தான் — ஒப்புக் கொள்கிறேன். பாவம், அந்தப் பாம்புகளைக் கூண்டுக்குள்ளே விட்டுடுங்களேன்'' — அழாக் குறையாகச் சொன்னேன்.

''எனக்குச் சொந்த ஊர் சேலம் ஆத்தூர். என் தந்தை ரங்கசாமி நாயுடு காட்டிலாகா அதிகாரியாக இருந்தார். சிறு வயதிலேயே முயல், மான், சிறுத்தை, கரடி, பூனை, நாய், பாம்புகளை வளர்த்தேன். அப்படியே பயமில்லாமல் வளர்ந்துட்டேன்.''

''பள்ளிக்கூடத்திலே படித்ததுண்டா?''

''ஒரே ஒரு மணி நேரம் படிச்சேன்! பத்து மணிக்கு ஸ்கூல்லே சேர்த்தார்கள். பதினொரு மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டேன் — அப்புறம் போகவே யில்லே!''

''சிறு வயதிலே ஒரு நாள் சேலத்தில் இரண்டு புலிக் குட்டிகளைக் கயிற்றில் கட்டிக் கொண்டு நாய்யாக வாக்கிங் போய்க்கொண்டிருந்தேன். அதைப் பார்த்து ஆச்சரிய



பட்ட ஃப்ராங்க் ஃபெரியன் என்ற அமெரிக்க டைரக்டர் 'நீங்க என்ன சொன்னாலும் புலிக் குட்டி கேட்குமா?' என்றார். 'ஓ!' — நான் புலிக் குட்டிகளுக்கு உத்தர விட்டேன். அவை சொன்னபடி கேட்டன. உடனே ஃப்ராங்க் ஃபெரியன் என்னை ''மானிடர் ஆஃப் கொமானி'' என்ற ஆங்கிலப் படத்தில் நடிக்க வைத்தார். மைசூரிலும் ஹாலிவுட்டிலும் படப் பிடிப்பு நடந்தது. அப்போது எனக்கு இளம் முறுக்கு. (வயசு: முப்பத்தைந்து). அந்தப் படத்தைத் தொடர்ந்து ஜங்கிள் கேட், டார்ஜான் கோஸ் டு இண்டியா, ஜங்கிள் போன்ற பல ஆங்கிலப் படங்களில் நடித்தேன்.''

''மிருகங்களுடன் நடிப்பது ஆபத்தில்லையா?''

''ஆபத்துத்தான். நடிப்பது இருக்கட்டும். ஒரு சமயம் காட்டிலே தாயிடம் இருந்த இரண்டு புலிக்குட்டிகளை எடுத்துக்கொண்டு தப்ப முயன்றேன். இதோ பார்த்தீர்களா? தாய்ப் புலி கொடுத்த பரிசு! (சட்டையைக் கழற்றுகிறார் — முதுகில் நாலைந்து பள்ளங்கள்) எட்டு வருஷங்கள் ஆஸ்பத்திரியில் இருந்தேன். பிழைத்ததே பெரும் பாடு.''

''வெளி நாட்டுப் படங்களில் உங்களை எப்படிக் காட்டுவார்கள்?''

''ஜானி வைஸ்முல்லர் நடித்த டார்ஜான் படத்தில் எனக்கு பிளாஸ்டிக் முகம் வைத்துப் படமெடுத்ததால் ஆங்கிலேயர் மாதிரி தோற்றமளித்தேன்.''

ஓர் இனிய அனுபவம்: ''சேலத்தில் முப்பது வருஷங்களுக்கு முன்னே ஒரு பொருட் காட்சி நடந்தது. அதில் ''உடல் உறுதி பெற'' என்ற டாக்குமெண்டரி எடுத்தார்கள். மைதானத்தின் நடுவே உள்ள கம்பி வலைக்குள் நான் ஹோசூர் காட்டில் பிடித்த புது சிறுத்தையுடன் போரிட்டேன். இதைக் கவிக்குயில் சரோஜினி தேவி, வல்லபாய் பட்டேல், விஜயலட்சுமி பண்டிட் முதலியோர் ரசித்துப் பார்த்தார்கள். பாராட்டினார்கள்.

''பாருங்க — மிருகங்களுடன் பழகும் போது அதன் சைக்காலஜி தெரிஞ்சிருக்கணும் — சிறுத்தை புரண்டு அடிக்கும். புலி ஒரே பாய்ச்சலில் எதிரியைத் தாக்கும். சிங்கம் நின்றுதான் அடிக்கும்.''

புலிக்குட்டி கோவிந்தராஜன் பல இந்திப் படங்களிலும் மிருகங்களுடனும் போரிட்டு, மற்றும் மாஸ்டராக இருந்து படப் பிடிப்புக்கு உதவியிருக்கிறார். (தரம்வீர், ஆசாத், அதாலத் ரஸியா, கல்தாரு)

''சரி, நீங்க எடுத்து வரும் சிறுத்தையும் சிறுவனும் படம் பற்றி?''

''சூழ்நிலையினால் குடும்பத்தை விட்டுப் பிரியும் ஒரு சிறு குழந்தையை மிருகங்கள் பாசத்துடன் வளர்க்கின்றன. அவன் மாவீரன் ஆகிறான். இதுதான் அவுட்லைன்!

''இதில் என் பேரன் மணிகண்டன்தான் சிறுவனாக நடிக்கிறான். படம் பதினோராயிரம் அடி வளர்ந்து விட்டது. சேலம், கொல்லி மலையிலும் அஸ்ஸாம் போகிற வழியிலும் படப் பிடிப்பை நடத்துகிறேன். இதில் ஒரு சீன். காட்டில் வளர்ந்து மாவீரனை தங்களது குழந்தையைத் தேடிப் பல மிருகங்கள் நகருக்கு வருவது. இதையும் ரொம்ப நேச்சரலாக எடுத்திருக்கிறேன்.'',

நைசாக எழுந்திருக்க முயன்றேன். புலிக்குட்டி என்னை நழுவிச்செல்ல விடவில்லை. புலி, சிறுத்தை, மற்றும் பல ராட்சச முதலைகளைக் காட்டினார் கோவிந்தராஜன். இவரது குடும்பமே வன விலங்குகளுடன் சர்வ சாதாரணமாகப் பழகுவதைப் பார்த்து ஆச்சரியப் பட்டேன்!

''இது ஆபத்தான தொழில்தான். அவ்வப்போது எங்கள் உயிருக்கே கண்டமும் உண்டு. நேற்றுக் கூட என் மகன் ஒரு சிறுத்தையுடன் ஒரு தெலுங்குப் படத்தில் சண்டையிட்டபோது நெற்றியில் நல்ல அடி. இருந்தாலும் பயங்கரமான மனுஷனை நம்புவதை விட இந்தப் பயங்கர மிருகங்களை நம்பலாம்'' — சிரித்துக் கொண்டே சொன்னார் புலிக்குட்டி!

பேட்டி: **மன்னை சௌரிராஜன்**

## கனவில் கவியரசு!



'ஓ...ராமாயி' திரைப் பாடல் மூலம் அறிமுகமான கவிஞர் ஈரோடு ஆற்றலரசு தம்முடைய கனவைச் சொல்லிச் சொல்லி வியக்கிறார்:

''என் கனவில் கண்ணதாசன் அடிக்கடி தோன்றி நலம் விசாரிக்கிறார். நான் கவிஞன். என் கனவில் அவர் தோன்றுவது சகஜம் என்றுதான் முதலில் நினைத்திருந்தேன். ஆனால் அவர் ஒரு நாள் என் மனைவியின் கனவிலும் தோன்றி என் நலம் விசாரித்திருக்கிறார். என்னால் நம்பவே முடியவில்லை.

அன்றே எனக்கு 'கல்யாண முகூர்த்தம்' என்கிற படத்திற்குப் பாட்டெழுதும் வாய்ப்பு ஏற்பட்டது.

''மணிவண்ணன் குழலோசை கீதங்கள் பாடும்'' என்கிற பல்லவியோடு தொடங்கும் பாடலைத் தயாரிப்பாளர் மோகன் பாபுவைச் சந்தித்துப் பாடிக் காட்டினேன்.

உடனே அவர், ''அடடா! நம்ம கவிஞர் எழுதின வரி மாதிரியே இருக்கிறது'' என்று என்னைப் பாராட்டியதும் மெய்சிலிர்த்துப் போனேன்.

— **திரைஞானி**



# அந்தப் பெண் யார்?

## வட்டமேஜை

● 3–4–83 இதழில் மகாராஜபுரம் சந்தானம் பேட்டியில் ஒரு இளம் பெண் வீணை வாசித்ததை ஸ்ரீசந்தானம் அவர்களின் மனைவி கண்ணீர் ததும்பக் கேட்டு ரசித்ததாக எழுதிய தாங்கள் அந்தப் பெண் யார் என்று ஏன் எழுதவில்லை? தயவுசெய்து படத்துடன் பெயர் பிரசுரிக்கவும்.

சென்னை-33 விஜயலக்ஷ்மி

(மகாராஜபுரம் சந்தானம் தமது மனைவியுடன் ரசித்த வீணை இசையை வழங்கிய பெண் சுஜாதா. ராணி மெய்யம்மை பள்ளி பிளஸ் டூ மாணவி. ஏழு வயதில் அனந்தலட்சுமி வாரியாரிடம் கற்று, பிறகு வீணை பிச்சுமணி ஐயரிடம் பயின்று, தற்போது கல்பகம் சுவாமிநாதனிடம் கற்றுக் கொள்கிறாள் படம்: மேலே)

● மகாராஜபுரம் சந்தானம் மேலட்டை வண்ணப் படத்துடன் கல்கி இதழ் கண்டு மகிழ்ந்தேன்.

ஆனால் பல புதுக் கீர்த்தனங்களைப் பாடிய திரு மணி ஐயருக்கு அடாணாவில் ஒரே ஒரு பாட்டுத்தான் தெரியும் என்று சொல்லிக் கொண்டார் என்றால் ஆச்சரியமாக இருக்கிறது. அவரைச் சற்றுத் தகுதிக் குறைவுடையவர் போல் சந்தானம் சொல்லியிருப்பதாகத் தோன்றுகிறது.

சென்னை-33 எஸ். ராஜகோபாலன்

(இது பற்றி மகாராஜபுரம் சந்தானம் கூறியதன் சுருக்கம்:

''சுமார் 40 வருஷங்களுக்கு முன், மேற்படி நிகழ்ச்சி உண்மையில் நடந்தது. இதனால் மணி ஐயர் அவர்களின் திறனைக் குறைவாக மதிப்பிட்டுச் சொன்னதாக எடுத்துக் கொள்ளலாகாது. இதற்குப் பிறகு மணி ஐயர் நிறைய அடாணா ராகப் பாடல்களைப் பாடிப் பிரபலப்படுத்தியிருக்கிறார். அப்பாவுக்கு மணி ஐயரிடம் (படம்) ரொம்ப மதிப்பு உண்டு'')

● 10–4–83 இதழில் சில தனியார் நிறுவனங்கள் வங்கிகளை விட அதிக வட்டி கொடுப்பதாகவும், மாதா மாதம் தருவதாகவும் வங்கிகள் 6 மாதத்துக்கு ஒரு முறைதான் வட்டி கொடுப்பதாகவும் பேட்டி கண்டு எழுதியுள்ளீர்கள்.

வங்கிகளை விட அவர்கள் வட்டி அதிகமாகக் கொடுக்கலாம். ஆனால் வங்கிகளும், மாதா மாதம் வட்டி கொடுக்கும் திட்டங்களை வைத்திருக்கின்றன.



இது தவிர வாடிக்கையாளர்களுக்குத் தேவைப்படும்போது அவர்கள் போட்டிருக்கும் டெபாஸிட் மீது குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்கிறது, வங்கி. வேறு பல பணிகளையும் ஆற்றுகிறது. வங்கிகளைப் பற்றிக் குறைத்து மதிப்பிட வேண்டாம்.

தென்காசி பி. சங்கரநாராயணன்,
பாங்க் ஆஃப் தமிழ்நாடு

● புது ஸ்டில்களுடன் தோன்றிய புதுக் கவிதைகளை அணு அணுவாகப் படித்து ரசித்தேன்.

பம்பாய்-58 ஏ. கணேசன்

● எல். ஐ. சி.யிலிருந்து பணம் பெறுவது எப்படி என்று சில வழிகளைச் சொல்லியிருக்கிறார் அதன் அதிகாரி ஒருவர். அதாவது பாலிஸிதாரர் இறந்து விட்டால் – ஆனால் பாலிஸிதாரர் உயிரோடிருந்த போதே மெச்சூர் ஆன பாலிஸிபணத்தை வாங்குவதற்காக அலையோ அலையென்று அலைந்து பணம் வாங்கிய உண்மை அனுபவத்தை ஒரு மர்மத் தொடர் கதையை விடச் சிறப்பாக எழுத முடியும். ப்ரீமியம் வாங்குவதில் உள்ள தீவிரம் பாலிஸி பணத்தைக் கொடுப்பதில் நிச்சயம் இல்லை.

மதுரை-6 கே. ராஜகோபாலன்

● ''பாதாள ரயில்'' கட்டுரையில் கல்கத்தா வாசியினர் வயிற்றெரிச்சலை அழகாகச் சித்திரித்ததற்குக் கோடி நன்றிகள். கண்ட கண்ட நேரத்தில் 'பவர் கட்'. இந்த லட்சணத்தில் ''ட்யூப் ரயில்வே'' வேறு! சமீபத்தில் பாதாள ரயிலுக்காகக் 'குழி' வெட்டிய ஓர் இடத்தில் 'டாக்ஸி' ஒன்று தலைகீழாக விழுந்து கிடந்தது!

கல்கத்தா-29 'கல்கத்தா பாலு'

● நாய்க் குட்டிகளுடன் நம் குழந்தைகளை விளையாட விட்டால் எவ்வளவு கொடூரமான மூளை பாதிப்பு நோய்க்கு இலக்காக வேண்டும் என்று படித்ததிலிருந்து நாங்கள் குழந்தைகளை நாய்க்குட்டிகளுடன் பழக விடுவதே இல்லை. டாக்டர் இன்பசேகரனுக்கு நன்றி.

வடுலூர் எஸ். கண்ணன்

● சவிதாவின் தொடர் நாவலுக்கு ஜெயராஜ் வரைந்துள்ள அட்டகாசமான வண்ண அட்டைப் படம் இக் கோடைக்கேற்றவாறு கண்ணுக்குக் குளிர்ச்சியாக அமைந்திருக்கிறது.

வடலூர் வெ. லட்சுமிநாராயணன்.

● கப்பு அரங்கநாதனின் எழுத்துக்கு வரையப்பட்ட கண்ணீர் ததும்பும் கண்களுடன் கூடிய படம் என் மனத்தைப் பாதித்தது. ஒவியர் ஜமாலுக்குப் பாராட்டு.

திருச்சி-1 து. செல்வமுத்து

# அத்தியாயம் 15

நாணு ஐயர் உள்ளே நுழைந்தபோது காந்திலால் மேத்தா இரு கைகளாலும் போனைப் பிடித்து எதிரே வைத்துக்கொண்டிருந்தான். காதில் பொருத்திக்கொள்ள வேண்டிய அவசியமில்லாமல் ரிஸீவர் பக்கமிருந்து பெரும் கூச்சல் கேட்டது.

''பாதி தூரம் வந்த சரக்குக்கு என்ன தைரியத்தில் பில் அனுப்பிப் பணம் கேட்கிறாய்? சரக்கு எப்படி வந்தது தெரியுமா உனக்கு? க்ரேன் செலவும் மற்றும் லாரி செலவும் யாருடையது? இங்கிருந்து திருப்பதி வரை கார் போயிருக்கிறது. இரண்டு பேர் ஓவர்டைம் இரண்டு நாள். யார் செலவு? முதலாளியிடம் பேசிவிட்டேன். உனக்குத் தலைமுழுகச் சொல்லி விட்டார். மறந்து போய்க்கூடக் கம்பெனிப் பக்கம் வர வேண்டாம். ஆனால் ஒன்று. பம்பாய் சரக்கு ஒரு லாரி லோடு என்று நினைக்காதே. அடுத்த கப்பலில் ஐம்பது லாரி லோடு வருகிறது. தண்ணித் தொட்டித் தெருவிலேயே ஏற்பாடு செய்கிறேன் பார். இந்தப் பில் பணம் கிடையாது என்பது மட்டுமில்லை. மகத்தான ஒரு வியாபாரம் இழந்து விட்டாய். என்னிடம் கெஞ்சிப் பயனில்லை. என்னைப் பார்க்கவும் வரவேண்டாம். நன்றி!''

ரப்பர் உறைக் கம்பெனி அக்கௌண்டெண்ட் சீறி முடித்தார். இத்தனை கூச்சலுக்கு அந்தக் கடைசி வார்த்தை நம்பிக்கை அளித்தது. என்னைப் பார்க்க வர வேண்டாம். என்னிடம் கெஞ்சிப் பயனில்லை. இதற்கு என்ன அர்த்தம்? காந்தி லாலுக்குத் தெரியும் தனியே என்னை வந்து பார். கெஞ்சு.

செய்யலாம். செய்ய வேண்டும். உடனே இல்லை. நாலு நாள் கழித்து. இவரைப் பார்க்கும் முன்பு அந்த விஸ்வநாதனைப் பார்க்க வேண்டும். அந்த ஆள் பட்ட சிரமங்களைக் கம்பெனியில் பெரிது படுத்தாமல் இருக்கும்படி கேட்க வேண்டும். ஆபீஸில் பார்க்காமல் வீட்டிற்குப் போய் உட்கார்ந்து பேச வேண்டும். விஸ்வநாதன் வீட்டு நம்பர் என்ன? தன் டைரியைப் புரட்டி நம்பர் தேடினான்.

விஸ்வநாதனுக்குக் குழந்தைகள் உண்டா?

தாரிணி போன் எடுத்தாள். 'இல்லையே ஆபீஸ் போயிருக்காரே' என்றாள். வேகமாய்த் தமிழ் பேசினான். குழந்தை ஒன்றின் கூச்சல் போனில் கேட்டது.

தமிழர்களைத் தமிழ்ப் பேசி மடக்குவது எளிது. அவன் ஊருக்கு வந்த புதிதில்



தமிழர்கள் ஆங்கிலத்தில்தான் வியாபாரம் பேசுவார்கள். வீட்டிலும் ஆங்கிலம் அதிகம் உபயோகப்படுத்துவார்கள். இப்போதுதான் கொஞ்சம் தமிழ் அதிகமாக இருக்கிறது. நாலு கடை தள்ளியிருக்கிற வடிவேல் மேடை மீது தமிழ் பேசத் துவங்கியதும் கூட்டம் அசையாமல் கேட்கிறது. குரல் உயர்த்திப் பேசினால் கை தட்டுகிறது.

ம்ம்... விஸ்வநாதன் வீட்டுக்கு யாரைக் கூட்டிப் போகலாம். காந்திலால் நிமிர்ந்தான். நாணு ஐயர் கைகூப்பினார்.

''அரே ஒல்ட் மென்... வாங்கோ... சாப்பிட்டா ஆச்சா?''

''ஆச்சு சேட்ஜி. வடிவேலு இன்னிக்குக் கடை லேட் போல இருக்கு. நேத்தே சாவி வாங்கிக்கோண்ணுன். நவமி. நாளைக்கு வாங் கிக்கிறேன்னேன்.''

''இன்னிக்கு நாள் நல்லதா?''

''முழுக்க அமிர்த யோகம். என்ன புதுசா ஒப்பந்தமா?''

''இல்லே நாணு ஐயர். ஒரு வியாபாரம் எதிரிப்போவுது. லாரி மடங்கிப் போச்சு. கத்தருங்கோ. அதான் பெரிய மனுஷான் நாலு பேரைப் பார்க்கலாமா சமாதானம் பேசலாமான்னு நெனைக்கிறேன்.''

''போலாமே.''

''ஞாயித்துக் கிழமை போலாமா நாளு நல்லதா?''

''ம்... போலாம். கார்த்தாலே போயிடணும்.''

''கூட வரீங்களா?''

''நானு?''

''ஆமா ஐயர். எனக்குத் தமில் வரதில்லே. இங்லீஷ் பேச முடியலே. சிரிக்கிறாங்கோ..'

''நான் வடிவேலுக்கிட்ட வேலே ஒத்துண்டு உன்கூட வியாபாரத்துக்கு வரலாமா? தப்பில்லேயா?''

''நான் பேசறேன் சாமி வடிவேலுக்கிட்ட. எனக்கு வடிவேலு கட்டுப்படும்.''

''அவன் மீட்டிங் பேசறவன். அவனே நம்ப முடியாது.''

''புரியுது புரியுது. ஆனா வடிவேலு நரம்பு எனக்குத் தெரியும்.''



# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

''உனக்கு ஆள் படை சரியா இல்லையா?''

''இல்லே சாமி. நான் கணக்குப் போட்டுடு வேலை ... எழுதாசி எழுத முடியலே.''

நாணு ஐயர் யோசித்தார். உடனே காயத்ரிக்கு வேலை கேட்கலாமா. காயத்ரிக்கு இந்த வேலை சுலபம். அவ ஆங்கிலம் சுத்த மா... பு. ... படித்த பெண்ணுக்கு லாகிரி கம்பெனிக் ... கணக்கு சுண்டைக்காய். ஆனால் உடனே கேட்க வேண்டாம். கொஞ்சம் தள்ளிப் போடுவோம். இவன் நமக்குக் கட்டுப்படும்படி செய்வோம். இவன் நன்றியில் நனையட்டும். கண்ணில் நம் கையை வைத்து ஒற்றிக் கொள்ளட்டும். அப்போது கேட்போம். இப்போது கேட்டால் சம்பளம் கட்டையாய்ச் சொல்வான். கொஞ்சம் விட்டுப் பிடிப்போம்.

''ஞாயிற்றுக் கிழமை நான்வரேன் சேட்ஜி. வடிவேலு கிட்டப் பேச வேண்டாம். கொஞ்சம் தள்ளிப் போய் சென்ட்ரல் பக்கம் போய் உன்னோட சேர்ந்துக்கறேன்.''

''மேலே... இடம் வசதியா இருக்கிறதா ஓலைக் கூரை.''

''அடாடா... அபாரமான இடம். காத்துப் பிச்சுக்கிட்டு வரும். பையைக் கார்த்தாலே கொண்டு போய் வச்சு சுவாமி படம் மாட்டி பால் வரவழைச்சுக் குடிச்சேன். வாடகை விஷயம் பேச வந்தேன்.''

''குடித்தன வாடகைன்னு பெரிசாக் கேக்கலாம். நீங்க மட்டும்தானே இருபத்தைஞ்சு ரூபா கொடுங்கோ.''

அது வடிவேலு பேசித் தங்க வைத்த இடம். காந்திலால் மைத்துனன் படிக்கச் சென்னை வந்தபோது கட்டின கூரை. பழைய டயரும் லாரி சாமானும் வைக்கப்பட்டிருந்தது. அத்தனையும் அகற்றிச் சுத்தப் படுத்திக் கொடுத்தான். அந்த இடத்தை வடிவேலு இரவு படுப்பதற்காகக் கேட்ட போது காந்திலால் மனைவி கூடாது என்று சொல்லி விட்டாள். ஆனால் நாணு ஐயரை எதிர்க்கவில்லை.

> அவன்: உன்னை நேற்றுப் பெண் பார்க்க வந்து விட்டுப் போன மாப்பிள்ளை, கமலஹாசன் மாதிரி இருந்தார்ன்னு சொன்னியே! ஏன் அவரைப் பிடிக்கலேன்னு சொல்லிட்டே?
>
> இவள்: அவர், 'கல்யாணராமன்' கமல் மாதிரியில்லே இருந்தார்!
>
> —ஆர். நடராஜன்



குடித்தனமில்லையே தனியாள்தானே என்கிறான் காந்திலால். பெண்ணைக் கூட்டி வரப் போகிறேன் என்று இப்போதாவது சொல்லலாமா? வேண்டாம். போகட்டும். தோன்றியவுடன் எதையும் செய்யாது சற்றுத் தள்ளிப் போடுவோம். வயசுப் பெண்ணோடு இந்த மாடியில் தங்க முடியுமா என்று யோசிப்போம்.

''அப்ப ஞாயித்துக் கிழமை...'' நாராயண சாமி எழுந்தார்.

**ஞா**யிற்றுக்கிழமை காலையில் விஸ்வநாதன் உள்ளே நுழைந்து கைகூப்பும் கிழவரை வியப்புடன் பார்த்தான். கை கூப்பினான்.

இவரை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே என்று யோசித்தான். எல்லாக் கிழவர்களையும் எங்கோ பார்த்த மாதிரிதான் இருக்கிறது. பரிச்சயம் உள்ளது போல் தோன்றுகிறது. கொஞ்சம் பேசினாலும் நெடுநாள் பழக்கம் போலப் படுகிறது. இளைஞர்கள்தான் புதிராய் இருக்கிறார்கள். அதுவும் இளம் பெண்கள் விஸ்வநாதனுக்குச் சற்றும் புரியாது போய் விடுகின்றனர்.

''என் பேர் நாராயணசுவாமி. காந்திலால் டிரான்ஸ்போர்ட்டிலேருந்து வரேன். சேட் வாசல்லே கார்ல இருக்கார்.''

ஓ... விசு யோசித்தான். காந்திலால் எதற்கு என்னைத் தேடி...

''என்ன விஷயம்?''

''கொஞ்சம் பேசணும்.''

''நீங்க என்ன ,காந்திலால் டிரான்ஸ்-போர்ட்லே?''

''கணக்கு விஷயம் கவனிக்கிறேன்.''

''புதுசா?''

''இப்பத்தான் சேர்ந்தேன். சேட்டை வரச் சொல்லட்டுமா?''

''சரி.''

நாணு ஐயர் மெல்ல வாசல் நோக்கித் திரும்ப ''நீங்க உட்காருங்க. நான் வரச் சொல்லி ஆள் அனுப்பறேன். வாசல் வரைக்கும் மறுபடி நடக்க வேண்டாம்.'' என்றான் விசுவநாதன்.

''ரொம்ப தேங்க்ஸ்... ப்பா... ராஜ கோபாலா... நல்ல வெய்யில்.''

''தாரிணி ஜலம் கொண்டு வா.''

''தேங்க்ஸ். பச்சுன்னு இருக்கு தோட்டமும் வீடும். ரயில் சத்தம் உளப்பலா இல்லையோ.''

''பழக்கமாயிடுத்து. சாருக்கு எந்த ஊர்?''

''மன்னார்குடி.''

''அட!''

''உங்களுக்கும் மன்னார்குடியா?''

இல்லே. சிக்கல் பக்கம்.''

''சபாஷ். தஞ்சாவூர்தானா?''

''சார் இதுக்கு முன்னாடி...''

''தமிழ் வாத்தியார். நேஷனல் ஸ்கூல்ல.''

''அப்படியா அங்க கருடன்னு ஒரு எழுத்தாளர் இருந்தார் தெரியுமோ?''

''தெரியும். நீங்க படிச்சிருக்கேளா?''

''முழுக்கப் படிச்சதில்லே. ஒரு சிறு கதைத் தொகுதி படிச்சிருக்கேன்.''

''சுமாரா எழுதுவான்.''

''இல்லே. நல்லாவே எழுதுவார். மினுக்குன்னு கதைக்கு நடுவே ஒரு செய்தி இருக்

# சுவாஸ் மின்ட்ஸ்




அமிர்தாஞ்சன் லிமிடெட்டின்
ஒரு தரமான தயாரிப்பு

---

## ஸ்ரீ ராம(நவமி)

நவமி என்பதாவது பிரதமையிலிருந்து ஒன்பதாவது நாள். ஒரு வருஷத்தில் எத்தனை நவமி திதி வந்தாலும் சித்திரை மாதம் சுக்ல பட்சத்தில் வரும் நவமி மிகவும் உயர்ந்தது. யாவரும் எந்த கடவுளையும் தியானம் செய்வதற்கு மிகவும் புனிதமான நாள்.

ஆனால் "கிராண்ட் ஸ்வீட்"களை வாங்குவதற்கு எல்லா நாட்களும் நன்னாளே.

## கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது பிரதான சாலை, காந்தி நகர்,
அடையாறு, சென்னை-600 020
போன்: 412557

இனிப்புகள்: கோதுமை அல்வா, ரஸமலாய், போளி, முந்திரிகத்தலி

காரம்: தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, மிக்ஸ்சர்

கிளைகள்:

காமதேனு சூப்பர் மார்க்கெட், அண்ணாசாலை, சென்னை-600 018
150, ஃபவுண்டன் பிளாஸா, பாந்தியன் சாலை, சென்னை-600 008

கும். பொத்திப் பொத்தி வைச்சிருக்கிற உணர்ச்சிகளை முட்டாளே... அது ரொம்ப அல்பம்னு சொல்ற த்வனி இருக்கும்.''

''அப்படி இடிச்சுக் காட்டறது புடிக்கிறதா உங்களுக்கு?''

''சந்தோஷமாக் கூட இருக்கு.''

''வாட் டூ யூ மீன்.''

''உதாரணமா அழறது முட்டாள்தனம்னு ரொம்ப நாளா ஒரு யோசனை. அவர் கதைல இதையே படிச்சபோது சந்தோஷமா இருந்தது.''

''அழறது முட்டாள்தனம்தானே?''

''ஆமாம்னு தோன்றது. ஏன் இல்லையா. நல்லதுங்கறேளா?''

''சிரிக்கிறது?''

''அதுகூட ஆபாசமாத்தான் இருக்கு. என்னால உரக்க வாய் விட்டுச் சிரிக்கவே முடியலே.''

''பிறகு உங்களோட தூக்கலான உணர்ச்சி என்ன?''

''சோகம். ஆழமான அமைதியான சோகம்.''

''கதை எழுதுவேளா?''

''என்ன சட்டுன்னு கேட்கறேள். எழுதினதில்லே. கொஞ்சம் கவிதை எழுதுவேன்.''

''புதுக் கவிதைங்கறாளே அதுவா?''

''புதுசாத் தெரியலே. பழசும் புதுசும் கலப்படமா ரெண்டுக்கும் நடுப்பட்ட இடமா எழுதுவேன்.''

''உதாரணமா ஒரு கவிதை சொல்லுங்கோ.''

காந்தி லால் உள்ளே நுழைந்தான்.

''வாங்க காந்திலால். என்ன வாசல்லே நின்னுட்டீங்க. நேரே வரவேண்டியது தானே?' விஸ்வநாதன் கைகூப்பினான். ''தாரிணி, குடிக்க ஏதாவது கொண்டாம்மா.''

''நமஸ்தே'' என்று காந்திலால் பதிலுக்குக் கைகூப்பினான். ''ஞாயித்துக் கிழமை தொந்தரவு பண்றமா?''

''தொந்தரவா.நத்திங்.ஈஸியா இருங்க.''

''சேட்ஜி நான் கொஞ்சம் சார் கிட்டப் பேசிடறேன். அப்புறம் உன் ஜோலிய வச்சுக்கோ. ரெண்டு நிமிஷத்துல படபடன்னு எங்கயோ போயிட்டோம். எங்க பேச்சு முடியட்டும்.''

''என்ன விஷயம் காந்திலால்.''

''உப்புப் பெறாத விஷயம். தப்புப் பண்ணிட்ட பயம். வந்திருக்கார். அது கிடக்கட்டும். நீங்க கவிதை சொல்றேனேளே.''

தாரிணி காப்பி டம்ளரை ஸ்டூலில் வைத்துப் பரப்பினாள்.

''சகதர்மிணியா?''

''ஆமா. தாரிணின்னு பேரு.''

''தீர்க்க சுமங்கலி பவ. க்ஷேமமா இருக்கணும். குழந்தேள் உண்டில்லையா?''

''இரண்டு பெண் குழந்தைகள்.''

''அடடா. க்ஷேமமா இருக்கட்டும். தூங்கறதோ?''

''உள்ள என்னமோ விளையாட்டு. டீ.வி.''

''காந்திலால் குழந்தேளுக்கு என்னவோ கொண்டு வந்தேளே...''

காந்தி லால் முழங்கை நீளத்துக்கு இரண்டு பிஸ்கட் டப்பாவை நீட்டினான். பாதாம்' பருப்புப் பொட்டலமும் முந்திரி திராட்சைக் கலவையும் ஸ்டூலில் வைத்தான்.

''எதுக்கு காந்திலால்.''

''குழந்தேள் இருக்கிற இடத்துக்கு வெறும் கையோட வரப்படாது. சேட்ஜி. பூக்கூட வாங்கிண்டு வந்திருக்கலாம். தோணலே.''

''என்னய்யா காந்திலால திடீர்னு கிலோ பருப்பு..திராட்சைன்னு...என்ன விஷயம்?''

''அதான் சொன்னேனே பயம்னு. கிடக்கட்டும் விஷயத்துக்கு வாங்கோ.''

''நடக்குன்னு எப்படி சார் கவிதை சொல்றது?''

''புஸ்தகம் இருக்கோன்னோ?''

''அதெல்லாம் இல்லே சார். வெறும் நோட்ல கிறுக்கி வைக்கிறது. உங்களுக்குக் கருடன் நல்ல பழக்கமா?''

''பழக்கம் உண்டு. இன்னும் புரிஞ்சுக்கலே.''

''புரிய முடியாம என்ன? நேரடியான எழுத்துத்தானே பூடகமா பொதிஞ்சு எழுதறவர் இல்லையே.''

''கேட்கக் கர்வமா இருக்கு. எப்படிச் சொல்றதுன்னு தெரியலே. லட்சம் பேர் ஒருத்தனுக்குத்தான் முகம் அறியாத புகழ்ச்சியைக் கேட்க முடியும்.''

''புரியலையே.''

''நான்தான் கருடன். கதை எழுதறவன்.''

''சார்'' — விசுவநாதன் எழுந்தான்.

''உக்காருங்கோ. இப்போ எழுந்திருக்க வேண்டியது கை கூப்ப வேண்டியது என் முறை. வியாபாரம் பேச வந்த இடத்திலே இவ்வளவு விவேகம் கேப்பேன்னு நெனேக்கலே. இது ராஜகோபாலன் கருணை. தெய்வ சங்கல்பம்.''

''சார்....''

''எப்பவோ எழுதின கதைக்கு இப்போ பாராட்டும் மனசுக்குள் குளிர்வா வார்த்தையும் கேக்கறப்போ வாழ்ந்த வாழ்க்கை இருக்கிற இருப்பு எல்லாமே நிறைவா இருக்கு. காசோ பணமோ நான் சரியா சம்பாதிக்கல்லே. சம்பாதிக்கத் தெரியலே. ஆனா இப்படி மனசு நெறைஞ்சு அபாரம்னு பாராட்டற ஸ்நேகம். புரிஞ்சுக்கிற நட்பு சிலது உண்டு. கஷ்டப்படக் கஷ்டப்பட ராமனுக்கு நெறைய சிநேகிதா கிடைச்சா. சீதையே வேண்டாம்னு கூடத் தோணியிருக்கும். ஆனால் சீதைதான் இப்படி ஸ்நேகம் கிடைக்கக் காரணம்.''

''சார் நான் நமஸ்காரம் பண்றேன். தாரிணி கொஞ்சம் இங்கே வா.''

மனைவியுடன் அவர் காலில் விழுந்து எழுந்தான். பாதங்களைத் தொட்டு சத்குரு என்று ஒற்றிக் கொண்டான்.

நாணு ஐயர் நின்று கண் மூடி தியானித்தார். ''உன் நல்ல விருப்பங்கள் நிறைவேறட்டும்'' என்று கை தூக்கி ஆசீர்வதித்தார்.

காந்திலால் மலங்க மலங்க விழித்தபடி இருந்தான்.

(தொடரும்)

மலர்க்குவியல்!
கைத்தறியின்
கைவண்ணக்
குவியல்!

29 வது
கைத்தறிக்
கண்காட்சி '83

கோ-ஆப்டெக்ஸ் மைதானம்
சாலை,
சென்னை-8

கோ-ஆப்டெக்ஸ்

சிறப்புத் தள்ளுபடி
20% முதல்
40% வரை

304, ஆர்சர்ட் ரோடு

# நீங்கள் கேட்டவை

## தராசு

○ டி. எல். ரெட்டி, வேலிடுபட்டி

? திருவள்ளுவரின் பலவீனம் காமத்துப் பால் தானே?

! திருக்குறளில் உள்ள ரசம் போட்டி போட்டுக்கொண்டு எழுதப்படும் திருக்குறள் கதைகளில் விரசமாகிறது. ஆக பலவீனம் நம்மிடம்தானே யொழிய வள்ளுவரிடம் அல்ல.

○ செல்வி ஜாஹிதா பேகம், புதுக்கோட்டை

? செயற்கை இதயம் பொருத்தப்பட்ட பின் 110 நாட்கள் வாழ்ந்த கிளார்க், மனிதனால் முடியாதது இல்லை என்பதை உணர்த்திவிட்டாரே?

! மனிதனால் முடியாதது இல்லை என்று உணர்த்தியவர் செயற்கை இதயம் தயாரித்த ஜார்விக்கும் ஆபரேஷன் செய்த டாக்டர் டிவிரியெஸ்ஸும். மனிதனுடைய முயற்சிகள் எவ்வளவுதான் ஆற்றலுள்ளவையாயினும் இறையருள் இன்றி எதையும் சாதிக்க முடியாது என்று தம் மரணத்தின் மூலம் உணர்த்தியவர் கிளார்க்.

○ பி. வசந்தா பார்த்தசாரதி, ஆதம்பாக்கம்

? இந்தியர்களுக்கு எப்போது ரோஷம், மானம் வரும்?

! அவர்களை ஆளும் தலைவர்களுக்கு வெட்கம், மானம் ரோஷம் வரும்போது.

○ வித்யா கண்ணன், நாகர்கோயில்

? இரணியல் ரவியின் சுப்ரமணிய சம்ஹாரம் படித்தீர்களா?

! படிக்காதவர்களுக்குச் சொல்கிறேன்: பால் கமிஷன் முன் ஆஜரான இரணியல் ரவி விசாரணை விவரங்களைத் தொகுத்துத் தரும் நூல்தான் ''சுப்பிரமணிய சம்ஹாரம்''. துளிக்கூட சலிப்புத் தட்டாத படி துப்பறியும் நாவல் போல் படிக்க முடிகிறது. தேவஸ்தானம் மற்றும் அரசு சம்பந்தப்பட்ட இலாகாக்களின் கோப்புகளைப் பார்த்து, ஆஸ்பத்திரிக்குச் சென்று எப்படி மரணத்தைப் பதிவு செய்கிறார்கள் என்பதை அறிந்து, கோவிலுக்கும் விடுதிக்கும் சென்று வர எவ்வளவு நேரமாகும் போன்ற பல விஷயங்களைத் துல்லியமாக அறிந்துகொண்டு குறுக்கு விசாரணையில் தேவஸ்தான அதிகாரிகளையும் அறங்(?) காவலர்களையும் அரசு அதிகாரிகளையும் துளைத்து எடுத்திருக்கிறார் மனுஷன். வன்முறையின் காரணமாகச் சரிபார்ப்பு அதிகாரி சுப்பிரமணிய பிள்ளை மரணத்தைச் சந்தித்தார் என்று நீதிபதி பால் முடிவுக்கு வர, இவருடைய வாதங்கள் பெருமளவு காரணமாயிருந்திருக்கும். ஆனால் கட்சி வர்ணம் பல இடங்களில் பூசியிருப்பதைத் தவிர்த்திருக்கலாம். இவருடன் ஆஜரான வேறு பலரது வாதங்களைக் கொடுத்தாலும் ரொம்பவும் சுருக்கியிருக்கிறார். உதாரணமாக எந்தக் கட்சியையும் சேராத மேகநாதன் அறநிலையத் துறைக் கமிஷனரை ஆறு மணி நேரம் குறுக்கு விசாரணை செய்தார் என்பதை மறப்பதற்கில்லை.

○ மோ. க. இரத்தினசாமி, மோகனூர்

? நம் நாட்டு மக்களுக்குத் தங்கத்தின் மேலுள்ள ஆசை கொஞ்சமாவது குறைந்திருக்கிறதா?



○ பத்மினி



○ சரிதா

! குறையாமல் இருப்பதே நல்லது என்று தோன்றுகிறது. இன்றைய அரசின் பொருளாதாரக் கொள்கையையும் நடைமுறையையும் பார்க்கையில், நாட்டில் கடைசியில் மிஞ்சுவது நம் பெண்களின் கழுத்தில் காதில் இருக்கும் தங்கமாகத்தான் இருக்கும்போலிருக்கிறது!

○ ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்

? சினிமாவில் நடிக்க மீண்டும் பத்மினி ஆசை கொண்டு விட்டாரே?

! பாட்டி வேஷம் போட நடிகைகளுக்குப் பஞ்சம் போலும்.

○ எஸ். எஸ். டி. ராஜன், சிறுதையூர்

? சரிதா சென்னையில் தண்ணீர் வழங்கினாராமே?

! ரொம்பப் பேர் ஏப்ரல் முட்டாளாக்கப் பட்டதாகக் கேள்வி.

○ க. லெ. நரசிம்மன், புதுக்கோட்டை

? தங்கள் வாழ்க்கையில் உண்மையான மனிதரைச் சந்தித்ததுண்டா?

! அந்தப் பாக்கியம் மட்டும் நிறையவே உண்டு. காந்திஜியை எட்ட இருந்து பார்த்தேன். பரமாச்சார்யாளை அருகி-

## அத்தைக்கு மீசை முளைத்தால்...

விருந்து தரிசித்தேன். டி. கே. சி.யின் அன்பைப் பெற்றேன். கல்கி, ராஜாஜி ஆகியோருக்குப் பணிவிடைகள் செய்திருக்கிறேன்.

**○ நந்தலாலா, பண்ணுருட்டி ★**

**? திரைப்படங்களில் ஆபாசம் போதாதென்று இப்போது பாடல்களிலும் விரசம் மிகுந்துள்ளதே?**

! ஹிந்து பத்திரிகையில் அண்மையில் ஜி.எஸ்வி. ராமு என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். கணக்குச் சொல்கிறார்: ஒரு உபாத்தியாயர் முப்பது வருஷ சர்வீஸில் அதிகப்பட்சம் போனால் 3000 மாணவர்களிடம் ஒரு பாதிப்பைஏற்படுத்த முடியும். ஆனால் ஒரு சினிமாவோ 100 நாள் ஓடினால் 4,20,000 மக்களிடம் ஒரு பாதிப்பை ஏற்படுத்துகிறது. இத்தகைய சக்தி வாய்ந்த சாதனத்தை துஷ்பிரயோகம் செய்ய நாம் படாதிபதிகளை அனுமதித்து வருகிறோம். ஒரு முறை சிவாஜி இருந்த மேடையில் நான் சொன்னேன்: ''பணத்துக்காக வியாபார ரீதியில் படம் எடுங்கள். அதே நேரத்தில் அதில் சில நூறு அடிகளைக் குறைத்துக் கொண்டு அதற்குப் பதில் பல்வேறு துறைகளைப் பற்றிய ரசிக்கத்,தக்க டாக்குமெண்டரி



○ இராணியன்ராஜ்

களை எடுத்துப் படத்துக்கு முன்னால் காட்டுங்கள். ஹாலிவுட் தயாரிப்பாளர்கள் இந்தக் கடமையைக் கவனமாகச் செய்கிறார்கள்'' என்று எடுத்துக் காட்டினேன். சிவாஜி, ''அது எங்கள் வேலை இல்லை; பிலிம்ஸ் டிவிஷன் இருக்கிறது: அவர்கள் செய்வார்கள்'' என்று ஒரே போடாகப் போட்டு விட்டார். பிலிம்ஸ் டிவிஷன் டாக்குமெண்டரிகள் எப்பேர்ப்பட்ட 'போர்' என்று நமக்குத் தெரியாதா? நமது படாதிபதிகள் மனம் வைத்தால் இந்த நாட்டையே மகோன்னத நிலைக்கு உயர்த்த முடியும். ஹூம்... அத்தைக்கு மீசை முளைத்தால் கதைதான்!

**○ கரந்தை து. சுவாமிநாதன், தஞ்சை-2**

**? ''மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கொடுத்தாகி விட்டது'' - இனி தண்ணீர்ப் பஞ்சம் தமிழ்நாட்டில் அடங்கி விடுமா?**

! தண்ணீர்ப் பஞ்சம் அடங்குகிறதோ இல்லையோ, மத்திய அரசு மீது பழி போட்டுத் தப்பிக்கிற போக்காவது அடங்கிப் போகுமில்லையா? மாநில அரசுகள் சாக்குப் போக்குக் கூறிக் கொண்டிராமல் காரியத்



○ சிவாஜி

தில் இறங்க வேண்டிய நிர்ப்பந்தம் உருவாகுமே! அனாவசியமாக மத்திய அரசு மீது மக்களுக்கு வெறுப்பு உண்டாகாதல்லவா? இந்த அரசியல் நோக்கில் பார்த்தால் கூட மாநில சுயாட்சி அவசியம்தான். வேறு காரணங்கள் 3–4–83 இதழ் தலையங்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

**○ எஸ். அன்புமணி, ஈரோடு**

**? கல்விப் பணியை வியாபாரமாக நடத்திக் கொண்டிருப்பவர்களைப் பற்றி?**

! நுங்கம்பாக்கம் மாதர் சங்கத்தால் குடிசையில் ஆரம்பிக்கப்பட்ட நர்ஸரி பள்ளி வெள்ளி விழா காலத்தில் பல மாடிக் கட்டிடங் களுடன் கூடிய,மூன்று மையங்களில் கல்வி போதிக்கிற, மிகப் பெரிய நிறுவனமாக வளர்ந்து விட்டது. இதில் வியாபார நோக்கு சிறிதும் இல்லை என்று கூற முடியாது. வளர்ச்சிக்குத் தேவையான வியாபார நோக்குடன், பத்மா சேஷாத்ரி பள்ளியில் கல்விப் பணியும் சிறப்பாக நடப்பதால்தான் அதன் தலைவர் ராஜலட்சுமிக்கு ரோட்டரி சங்கத்தின் For the sake of Honour Award கிடைத்திருக்கிறது.எனவே வியாபார நோக்கு சுய லாபத்துக்கா, நிறுவனத்தின் வளர்ச்சிக்கா என்று பார்க்க வேண்டும். அத்துடன், எதற்கு முதலிடம், கல்விப் பணிக்கா, வியாபார நோக்குக்கா என்றும் ஆராய வேண்டும். அதன் பின்னர்தான் எந்தக் கல்வி நிறுவனம் பற்றியும் தீர்ப்பு வழங்கலாம்.

★ ரு. 10 பரிசு பெறுபவர்:
நந்தலாலா,
பண்ணுருட்டி
(முழு விலாசம் தேவை)

○ ராஜலக்ஷ்மி



# அதி ருத்ர மஹா யக்ஞம்

அவிஸ், நெய், சமித் ஆகிய மூன்றையும், மூல மந்திரம் சொல்லி, அக்னியில் அர்ப்பணிப்பது ஹோமமாகும். மூலமந்திரம் எவ்வளவு ஜபம் செய்கிறோமோ, அதில் பத்தில் ஒரு பங்கு ஹோமம்செய்ய வேண்டும். ஹோமத்தில் பத்தில் ஒரு பங்கு பிராம்மண சந்தர்ப்பணை செய்விக்க வேண்டும்.

ஹோமங்கள் பலவகைப்படும். கணபதி ஹோமம், சண்டி ஹோமம், நவக்ரஹ ஹோமம், மஹா சுதர்ஸன ஹோமம், ருத்ர ஏகாதசி போன்றவை. தடங்கல்கள் நீங்கி காரியங்கள் நடைபெற கணபதி ஹோமம். தாரித்ரியம், பயம் நீங்க சண்டி ஹோமம், நவக்ரஹ ப்ரீதிக்காக நவக்ரஹ ஹோமம், பில்லி சூனியம் எடுக்கவும், வெற்றிக்காகவும் மஹா சுதர்ஸன ஹோமம், ஆயுள், விருத்திக்கும், க்ஷேமத்துக்கும் ருத்ர ஏகாதசி. ஆகபல வகைப்படும் இத்தகைய ஹோமங்களை காம்ய (சொந்த) பலன்களை உத்தேசித்தும், உலக க்ஷேமத்திற்காகவும் செய்யலாம், ஹோமத்திற்கு ஹோமம் அவிஸ்-ம் சமித்தும்தான் மாறுபடும். ஆனால் நெய் ஒன்றுதான்.

வேதத்திலேயே கூறப்பட்டிருப்பது ருத்ர ஹோமம் ஒன்றுதான். பதினொரு வேதியர்கள் ருத்ர ஜபம் பதினொரு முறை செய்து ஒரு ஹோமம் செய்தால் ருத்ர ஏகாதசியாகும். இதைப்போல் பதினொரு பங்கு கூட 121 வேதியர்கள் பதினொரு முறை ஜபம் செய்து பதினொரு முறை ஹோமங்கள் செய்தால் மஹா ருத்ரமாகும். இவ்வாறு இன்னும் பதினொரு பங்கு கூட, அதாவது பதினொரு மஹாருத்ரம் செய்தால் அதிருத்ர மஹா யக்ஞமாகும். இதன் பலன் உலக க்ஷேமம்தான்.

ஒரு ருத்ர ஏகாதசி தனிப்பட்ட முறையில் செய்வதற்கு குறைந்த அளவில் மூவாயிரம் ரூபாய் செலவாகும். நடமாடும் தெய்வமான **ஸ்ரீ பரமாச்சாரியார்** அவர்கள், சாலை ஓரங்களிலும், மரத்தடியிலும் அமர்ந்து கொண்டு தன்னை தரிசிக்க வருபவர்களிடம் ''ஜனங்களின் துன்பம் குறைய, வறுமை ஒழிய, உடல் நோய் மன நோய் நீங்க எல்லா இடங்களிலும் மஹா ருத்ரம் செய்யுங்கள், அதிருத்ரம் செய்யுங்கள் ருத்ர ஜபத்தைத் தவிர உலகத் துன்பம் குறைய, க்ஷேமமடைய வேறு வழியே இல்லை'' என்று கூறுகிறார்கள். நடமாடும் தெய்வந்தான் நடந்து கொண்டே இருக்கிறார்கள்.

எனவே ஸ்ரீ பரமாச்சாரியார் அவர்களின் ஆக்ஞைப்படி, வருகிற மே மாதம் பதினேழாம் தேதி முதல் இருபத்தி ஏழு (17-27) முடிய அதிருத்ர மஹா யக்ஞமும், இருபத்தி எட்டாம் தேதியன்று சதசண்டி ஹோமமும் ஸ்ரீ சங்கர ஜயந்தியையொட்டி **பம்பாய், மாதுங்கா ஸ்ரீ சங்கர மடத்தில்** நடக்க இருக்கின்றன. நான்கு லட்ச ரூபாய்க்கு மேல் செலவாகுமென்று எதிர்பார்க்கிறார்கள் ஒரு மகாருத்ரத்துக்கு ரூ. 12,221 ஒரு ருத்ர ஏகாதசிக்கு ரூ. 1,111, ஒரு ருத்ர கலசத்திற்கு ரூ. 101.

அதிருத்ர மஹா யக்ஞத்தினால் ஜனங்களின் வறுமை, நோய்கள், நீங்கி,மழை பொழிந்து பசுமை பொங்கி ஒவ்வொருவரும், க்ஷேமமடைய வேண்டும் இதற்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் முடிந்த அளவு பொருளுதவி செய்ய வேண்டும். இராமாயணத்தில் அணில் பெற்ற பாக்கியம், அனைவரும் பெற வேண்டும். எல்லோரும் க்ஷேமமடைய அதிருத்ர மஹா யக்ஞத்திற்கு **ஸ்ரீ சங்கர மடம், மாதுங்கா, பம்பாய்-400 019** என்ற விலாசத்திற்கு தங்களாலான பொருளுதவி செய்து, நேரில் கலந்து கொள்ள முடிந்தவர்கள் கலந்து கொண்டு பகவத் பிரசாதத்திற்கு பாத்திரமாகப் பிரார்த்திக்கிறோம்.

# "லாப்ராஸ்கோப்" என்றால் என்ன?

## பொது அறிவுப் பக்கம்





✻ ராதா ✻ விஜி

**கல்லூரி மாணவ மாணவியர்க்கான**
**'க்விஸ்' ஸில் பங்கு பெற்றோர்**
**எம். ஆர். வாசுதேவன்**
**ஜி. முரளிதரன்**
**(விவேகானந்தா கல்லூரி)**
**பி. விஜயலக்ஷ்மி**
**என். ராதா**
**(எத்திராஜ் கல்லூரி)**
**மயிலாப்பூர் லஸ் கார்னரில் ஒரு பார்லரில்**
**ஐஸ் கிரீம் சுவைத்தபடியே பேசுகிறார்கள்.**

**நா**ணயத்தைச் சுண்டிவிட்டு, வாசுதேவன் 'தலை' கேட்க, தலையே விழுந்தது. முதல் கேள்வியைக் கேட்டார்.

''மேனகா காந்தியின் புதிய அரசியல் கட்சியுடைய பெயர் என்ன?''

''சஞ்சய் விசார் மஞ்ச்.''

''தப்பு. அது அரசியல் அமைப்பு இல்லை. அதைத்தான் 'ராஷ்டிரிய சஞ்சய் மஞ்ச்' என்று அரசியல் கட்சியாய் மாற்றி இருக்கிறார்.''

ஆக— விவேகானந்தாவுக்கு ஒரு பாய்ண்ட்.

விஜயலட்சுமி அடுத்ததாக, ''மாஸ்கோவுக்கு முன்னால் சோவியத் ரஷ்யாவின் தலைநகர்.....''

முடிக்கு முன்பே பதில் சொல்லிவிட்டார் முரளிதரன். விடை: லெனின் கிராட்.

விவேகானந்தாவுக்கு மற்றொரு பாய்ண்ட்.

முரளிதரன்: ''மிகச் சிறிய, மத்திய அரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதி (யூனியன் டெரிடெரி) எது?''

சரியான விடையை எதிராஜ் சொல்லாததால், அவரே கூறுகிறார்: ''லக்ஷத்தீவு, அமிந்திவி தீவு, மினிகாய்த் தீவுகள்தான். இவற்றின் மொத்தப்பரப்புகுமார் 100 ச.மீ.

அடுத்து டெல்லியிலுள்ள தமிழ்நாட்டின் சிறப்புப் பிரதிநிதி யார்? அவரது பணி என்ன? என்று கேட்ட ராதாவே, சரியான விடையையும் கூறும்படியாயிற்று: சிறப்புப் பிரதிநிதி ஜி. ஆர். எட்மண்ட். அவரது பணி மத்திய மந்திரிகள், பிரதமர், இவர்களுடன் தமிழக அமைச்சர்கள் சந்திப்புக்கு ஏற்பாடு செய்வது: தமிழக அமைச்சர்கள் கலந்து கொள்ள முடியாத டெல்லிக் கூட்டங்களில் தமிழகத்தின் சார்பில் கலந்து கொள்வது.

முரளிதரன் கேள்வி: இரண்டு மாநிலங்களுக்குத் தலைநகரமாயுள்ள ஒரே நகரம் எது? மாநிலங்கள் எவை?

விஜயலக்ஷ்மியின் பதில்: சண்டிகார். மாநிலங்கள்: பஞ்சாப், ஹரியானா.

ராதாவின் கேள்வி: எந்தத் தமிழ்ப் படத்தில் நடித்ததற்காக எந்த நடிகைக்கு 'சிறந்த நடிகை' என்ற தேசிய விருது கிடைத்தது.

முரளிதரன்: படம் 'பசி'.





✻ முரளி ✻ வாசு

வாசுதேவன்: நடிகை: ஷோபா.

அடுத்து வாசுதேவன் கேட்டார்: ''கருடா ஏர்லைன்ஸ்'' எந்த நாட்டுக்குச் சொந்தமானது?

ராதா, விஜி இருவருக்கும் விடை தெரியவில்லை. சரியான விடை: இந்தோனேஷியாவுக்குச் சொந்தம்.

விஜயலட்சுமி: 'ரக்பி' விளையாட்டு பற்றிச் சில வரிகள் சொல்ல முடியுமா?

வாசுதேவன்: அது ஒரு வகை கால் பந்து ஆட்டம். ஆனால் கையில் பந்தை வைத்துக் கொண்டு ஆடுவார்கள்.

ராதா: ஒரு டீமுக்கு எத்தனை பேர் சொல்ல முடியுமா?

விவேகானந்தாவால் கூறமுடியவில்லை.

ரக்பி விளையாட்டில் ஒரு டீமுக்கு 15 பேர் என்று ராதா கூற, இரு டீம்களும் ஆளுக்கு அரைப் பாயிண்டாகப் பிரித்துக்கொண்டனர்.

அப்போதைய ஸ்கோர் விவரம்:

| | |
|---|---|
| விவேகானந்தா | 5½ |
| எத்திராஜ் | 2½ |

முரளிதரன்: 'லாப்ராஸ்கோப்' என்பது என்ன?

எதிராளி உதட்டைப் பிதுக்கியதனால் அவரே விடை சொன்னார்: பெண்களுக்கான கருத்தடை அறுவைச் சிகிச்சைக்கு

உபயோகப்படுத்தப்படும் ஒரு நவீனக் கருவி. இதுவரை வயிற்றைத் திறந்துதான் அறுவை சிகிச்சை செய்தார்கள். ஆனால் இந்தக் கருவி மூலம் வயிற்றில் ஒரே ஒரு துளை போட்டு அறுவைச் சிகிச்சை செய்ய முடியும்.

விஜி கேட்டார்: 'க்ளெப்டோ மேனியா' என்பது என்ன?

அவரேதான் பதில் சொல்ல வேண்டியிருந்தது. விடை: சிலருக்கு அடிக்கடி மற்றவர்களுக்குத் தெரியாமல் சிறு சிறு பொருட்களைத் திருடுகிற பழக்கம் இருக்கும். இந்தப் பழக்கத்துக்கு க்ளெப்டோமேனியா என்று பெயர்.

வாசுதேவன் அடுத்து, தமிழில் மொத்தம் எத்தனை எழுத்துக்கள் என்று கேட்க, விஜி, ராதா இருவருமே ஒரே குரலில் 247 என்று சொல்லிப் பாயிண்டைத் தட்டிக் கொண்டு போய்விட்டனர்.

ராதா தமிழகத்தில் முதன் முதலில் யாரால், எப்போது, எங்கு மதுவிலக்கு அமலாக்கப்பட்டது என்றதும், வாசுதேவன் ராஜாஜியால் என்றார்.

எங்கே? எப்போது?

விஜியும் ராதாவும் 1937ல் சேலம் மாவட்டத்தில் என்று சரியாகச் சொன்னார்கள்.

க்விஸ் முடிந்தது. ஸ்கோர் விவரம்:

விவேகானந்தா 7

எதிராஜ் 5

வாசு, முரளி, விஜி, ராதா நால்வருக்கும் க்விஸ்ஸில் பங்கேற்றதற்கு நன்றி சொல்லி கல்கி சார்பில் புத்தகப் பரிசுகள் தந்ததுடன், வெற்றி பெற்ற முரளி, வாசுவுக்கு ரூ. 30 ரொக்கப் பரிசையும் தந்துவிட்டு விடை பெற்றோம்.

தொகுப்பு: **சந்திரமௌலி, ப்ரியன்**

புகைப்படம்: **ஸ்பைடர்**

இவள்: டி.வி.யின் மேலே எலி ஒன்று அசையாமல் நின்று கொண்டிருக்கிறதே!

வீட்டுக்காரி: டி.வி.யில் மசால் வடை செய்வது எப்படி என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!

—கனஜா





தலைமுறை என்ற சொல்லுக்குப் பரம்பரை என்ற ஒரு பொருள் இருந்தாலும் கால அளவில் அது கணக்கிடப்படுவது சராசரி 33 ஆண்டுகளே.

—ஏ. நி. ச்சலஸ்தேவி

ஒருவர்: இவருக்கு நகத்தைக் கடிக்கிற பழக்கம் இருந்துச்சே! எப்படிப் போக்கினீங்க, டாக்டர்!

டாக்டர்: பல் பூரா தட்டி எடுத்துட்டேன்!

—தங்க மனோகரன்






டாக்டர்: உலகிலேயே நீதான் அதிசயமான மனிதனாக இருக்கப்போகிறாய், நீ கர்ப்பமாக இருக்கிறாய்!

அவன்: மற்றவர்கள் தப்பாகப் பேசுவார்களே டாக்டர்! எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லையே!

—பிரியாபானு





✖ புற்றுநோய் ஆராய்ச்சி நடக்கிறது. இடது புறத்தில் புற்றுநோய் கட்டியுடன் எலியையும், வலது புறத்தில் அதற்கு ஊசிபோடும் விஞ்ஞானியையும் காணலாம்.

# பரவுகிறது புற்றுநோய்!

[இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் மொத்த மரண எண்ணிக்கையில் 3·7 சத விகித இடத்தைப் பிடித்திருந்தது புற்று நோய். 1975 கணக்கீட்டின்படி இது 19·3 சதவீதமாக உயர்ந்து விட்டது. இந்த நூற்றுண்டின் இறுதியில், மரணத்துக்கு நானே முக்கிய பொறுப்பு என்கிற முறையில் இருதய நோயைப் பின்னுக்குத்தள்ளிக் கொண்டு முதலிடம் பெறப் போகிறது 'கான்சர்' என்கிற புற்றுநோய். இந்த அவலம் ஏன்?]



✖ கேன்சர் சிகிச்சைக்காகக் கதிரியக்க முடைய ரேடியோ ஐஸோடோப்புக்கள் பாதுகாப்பான சூழலில் தயாரிக்கப்படுகின்றன.

ஒரு டாக்டரிடம் போகிறீர்கள். சாதாரணமாக நெஞ்சில் ஏதோ வலி, அல்லது எரிச்சல் என்று வைத்துக் கொள்ளுங்கள். உடனே ஒரு 'எக்ஸ்ரே' படம் எடுத்துப் பார்க்க வேண்டும் என்கிறுர் டாக்டர்.

''போன மாசம் தான் எடுத்தேன் டாக்டர்... படம் கூடக் கையோடு கொண்டு வந்திருக்கிறேன். புதிதாக ஏன் எடுக்க வேண்டும்?'' என்று நீங்கள் டாக்டரிடம் தாராளமாகக் கேட்கலாம். ஒரு நல்ல டாக்டர், உங்களை மேலும் மேலும் எக்ஸ்ரே எடுக்க வைக்க மாட்டார். மிகவும் அவசியம் என்று அவர் கருதினுல் அல்லாமல் எக்ஸ்ரே எடுப்பதைத் தவிர்த்து விட வேண்டும்.

சாதாரணமாக, நெஞ்சுப் பகுதியை எக்ஸ்ரே எடுப்பதானுல், 30 முதல் 50 மில்லி–ரெம் (Milli-rem) அளவு கதிர்வீச்சுக்கு நோயாளி உட்படுத்தப்படுகிறுன். எக்ஸ்ரே கருவியைச் சரிவர இயக்கவில்லையானுல் இந்த மில்லி–ரெம் அளவு கூடுதலாகி விடும் ஆபத்து உண்டு.

புற்று நோய்க்கு விதை போடுகிற பொருள் சிகரெட் மட்டுமில்லை. இந்தக் கதிர்வீச்சும் தான். ''தனக்குத் தரப்படுகிற எக்ஸ் கதிர் வீச்சின் அளவு எவ்வளவு என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள நோயாளிக்கு முழு உரிமை உண்டு. இந்த விவரத்தை டாக்டர் தர மறுத்தால், நோயாளி வேறு டாக்டரைப் பார்க்கப் போகலாம்'' என்கிறுர் ஜான் மோலார்ட் என்பவர், தம்முடைய கட்டுரை ஒன்றில்.

பேறு காலத்தின் போது எக்ஸ்ரே எடுக்கப்பட்ட பெண்ணுக்குப் பிறக்கும் குழந்தை, புற்றுநோயால் பாதிக்கப்படும் வாய்ப்பு 40 சதவீதம் அதிகரிக்கிறது என்கிறுர்கள்.

பெண்களைப் பொறுத்தவரை, ஆட்கொல்லி நோயாக உள்ளது மார்பகப் புற்று நோய்தான். இதைக் கண்டறிய மார்பகத்தைப் பல கோணங்களில் எக்ஸ்ரே எடுக்க வேண்டி நேரிடுகிறது. இதற்கு 'மம்மோகிராஃபி' என்று பெயர். மற்றைய உறுப்புக்களை விட மார்பகங்கள் மிகவும் மென்மையான இயல்புடையவை. ஆகையால் எக்ஸ் கதிர்வீச்சு மார்பகங்களைப் பாதிக்கிறது என்கிறார்கள். இந்த மம்மோகிராஃபி முறையால் மார்பகப் புற்றுநோய் கண்டறியப்படுவதை விட, நோய்க்குக் காரணமாவதே அதிகம் என்கிறார் டாக்டர் எப்ஸ்டீன் என்பவர்.

புற்று நோய் என்பது இந்த நூற்றாண்டில் மட்டும் மிரட்டுகிற நோய் அன்று. உலகில் உயிரினம் தோன்றிய காலத்திலேயே இந்தப் புற்று நோயும் தோன்றிவிட்டது என்பதற்கான தகவல்களைக் கண்டறிந்திருக்கிறார்கள். எகிப்திய 'மம்மி'களில் இந்த நோயின் அடையாளங்கள் காணப்படுகின்றன!

நோய்க்கான காரணங்கள் எவை என்று இன்னமும் கூடத் துல்லியமாய்க் கண்டறியப் படவில்லை என்றாலும், சில நுண் கிருமிகள், சில ரசாயனப் பொருள்கள், கதிர் வீச்சு இவை புற்றுநோய் உண்டாகக் காரணமாகின்றன என்று தெரிய வருகிறது.

சாதாரணமாகப் புகை பிடிக்கும் பழக்கம் புற்றுநோய்க்குக் காரணமாகிறது என்பதை அறிவோம். ஆனால் எக்ஸ்ரே, கருத்தடை மாத்திரைகள் உட்படப் பல பொருள்களில் இந்த நோயைப் பரப்பக் கூடிய வாய்ப்பு உள்ளது.

கருத்தடை மாத்திரைகளில் உள்ள ஈஸ்ட்ரோஜென்; குளோரின் கலந்த குடிநீரில் உள்ள குளோரோஃபார்ம்; பூச்சிக் கொல்லிகளில் உள்ள பொருள்களான டி.டி.டி., டியல்ட்ரின், ஹெப்டாக்ளோர்;

பல் இடைவெளிகளில் நிரப்பப் பயன்படும் பொருளில் உள்ள காட்மியம்,

தரை விரிப்புக்கள், உணவுப் பொட்டலங்களின் மேலுறை, தண்ணீர்க் குழாய், பால் உறைகள், போன்ற பிளாஸ்டிக் பொருள்களில் உள்ள பாலிவினைல் குளோரைடு; அணு ஆயுதங்கள், அணுசக்தி நிலையங்களிலிருந்து வெளிப்படுகிற கதிரியக்கம்—

என்றுபட்டியல் நீண்டுகொண்டே போகிறது.

ஐ.நா.வின் உறுப்பான உலக சுகாதார ஸ்தாபனத்தின் அறிக்கையின் படி, புற்று நோய்க்கான காரணங்களில் எண்பது சதவீதம், சுற்றுப் புறச் சூழல் தான். எனவே, இதனைத் தூய்மையாக வைப்பதன் மூலம் புற்றுநோய் வாய்ப்புகள் தவிர்க்கப்படக் கூடியவையே.

ஆனால் ஒரு முக்கியமான கேள்வி உறுத்துகிறது. புற்று நோய்க்கு எதிரான போர், இந்தச் சுற்றுப்புறத் தூய்மையைக் காக்க ஏன் நடைபெறவில்லை?

பச்சையான உண்மை இருக்கிறது. புற்று நோய் பரவக் காரணமான பல தயாரிப்புக்கள் பணம் பண்ணக் கூடிய பெரும் தொழிலாக மலர்ந்துள்ளன. அம்மாதிரியான தயாரிப்புகளைத் தடை செய்வதின் மூலம் பெரும் தொழில்களின் கோடிக்கணக்கான ரூபாய் வருமானம் பாதிக்கப்படும். புகையிலைத் தொழில், விதம் விதமான பூச்சிக் கொல்லிகள் போன்று எத்தனையோ தொழில்கள்.

இன்னும் சொல்லப் போனால், புற்று நோயை எதிர்த்துப் போராடப் பயன்படும் கருவிகளைத் தயாரிப்பது கூடப் பிரும்மாண்டமான தொழில் ஆகிவிட்டது. பலருடைய உயிரைக் குடிக்கும் நோயான புற்றுநோய், பலருக்கு வாழ்வு தரும் தொழில் வளரவும் உதவுகிறது என்பது விந்தையானதுதானே?

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சுற்றுப்புறப் பாதுகாப்பு நிறுவனத்தின் கணக்குப்படி பிளாஸ்டிக் தொழில் மூலம் காற்றில் கலக்கிற நச்சுப் பொருளான வினைல் குளோரைட் ஆண்டுக்கு 200 மில்லியன் பவுண்டு.

புற்று நோய்க்கான காரணங்களில் 20 சதவீதமாவது தொழில் அடிப்படையாக அமைந்தவை. இரும்புத் தொழிலில், நிலக்கரி உலையில் பணியாற்றுகிற தொழிலாளர்கள் நுரையீரல் புற்று நோய்க்கு ஆளாகிற வாய்ப்பு இருபது மடங்கு அதிகம்.

ஆண்டுதோறும் ஏராளமான ரசாயனப் பொருள்கள் புதிது புதிதாய் உற்பத்தி செய்யப்படுகின்றன. இவை புற்றுநோய் பரப்புகிற தன்மையற்றவைதானா என்பதை அரசு கவனிக்கிறதா என்பது தெரியவில்லை.

அரசும் தொழில்களும் மட்டும்தான் சுற்றுச் சூழல் காரணமான புற்றுநோய்க்கு இடமளிக்கின்றன என்பதில்லை. லட்சக்கணக்கான மக்களின் பழக்கங்களும், பாலுறவு நடைமுறைகளும் கூட இதற்குக் காரணமாகின்றன.

''நீங்க மாப்பிள்ளை வீட்டுக்கு வேண்டியவரா? பெண் வீட்டுக்கு வேண்டியவரா? உங்களுக்கு மட்டும் சமையற்காரர் மூணு தடவை பாயசம் போடுறாரே ஏன்?''

''நான் மாப்பிள்ளை வீட்டுக்கும் வேண்டியவர் இல்லை, பெண் வீட்டுக்கும் வேண்டியவர் இல்லை. இந்தச் சமையல்காரருக்குக் கடன் கொடுத்தவன்.''

—ச. கமல தியாகராஜன்



என்ன இருந்தாலும், புகை பிடிப்பதனால் ஏற்படுகிற தீமை வேறு எதிலும் இல்லை தான். புகைப் பழக்கத்தால் ஏற்படுகிற நுரையீரல் புற்றுநோய் காரணமாக மரணமடைகிறவர்கள் அதிகம். 95 சதவீதம் இந்த வகைப் புற்றுநோய் மரணத்திலேயே முடிவடைகிறது. அமெரிக்காவில் மட்டும் நுரையீரல் புற்றுநோய் காரணமாக ஆண்டுதோறும் ஒரு லட்சம் பேருக்கும் அதிகமானவர்கள் மரணமடைகிறார்கள்.

நுரையீரல் புற்று நோய்க்கும் புகைப் பழக்கத்துக்கும் உள்ள தொடர்பு முப்பதுகளின் கடைசியில் தான் முதன் முதலாகச் சந்தேகம் உண்டாக்கியது. இது ஆரோக்கியக் கேடானது என்கிற உண்மை, 1950 வரை, புகையிலைத் தொழிலைச் சேர்ந்தவர்களால் புறக்கணிக்கப்பட்டது.

''சிகரெட் பிடிப்பதால் பசி ஏற்படாது. உடம்பை 'ஸ்லிம்' ஆக வைத்திருக்கலாம்'' என்று கூடப் பெண்கள் ஊக்கப்படுத்தப் பட்டார்கள்!

இன்றளவும், கவர்ச்சிகரமான முறையில் இந்தப் புகையிலைத் தொழிலில்தான் விளம்பரங்கள் செய்யப்படுகின்றன. விளம்பரப் படங்களில் தான் எத்தனை அழகான, மிடுக்கான, ஆரோக்கியமான ஆடவர், பெண்கள்? இருமுகிற மாதிரியோ, நெஞ்சுக் கூடு பின்னிய மாதிரியோ எப்போதாவது படங்களைப் போடுகிறார்களா? குறைந்த பட்சம் சிகரெட்டின் புகையையாவது பார்க்க முடிகிறதா? உண்மையைத் திரித்துச் செய்யப்படுகிற இந்த வகையான விளம்பரங்கள் சமூக விரோதமானதில்லையா?

1932—க்கும் 1975—க்கும் இடைப்பட்ட காலத்தில், மேலை நாடுகளில் புகைபிடிக்கும் பழக்கமுடைய பெண்களிடையே நுரையீரல் புற்று நோய் 660 சதவீதமாக உயர்ந்துள்ளதாம். நல்ல காலம், நம்முடைய நாட்டில் பெண்களில் புகை பிடிப்பவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவுதான்.

அனேக டாக்டர்களின் கருத்துப்படி, எல்லா மனிதர்களுக்குமே புற்றுநோய் சாதாரணமாக வரக் கூடும்தான். ஆனால் மனித உடலமைப்பின் இயல்பான எதிர்ப்புச் சக்தி, மற்றைய நோய்க் கிருமிகளை அழித்து விடுவது போல், புற்று நோய் சக்தியையும்இருந்த இடம் தெரியாமல் ஆக்கி விடுகிறது. உடலின் எதிர்ப்புத்திறன் பலவீனமடைகிற போதுதான் புற்றுநோய் உட்பட எந்த நோயும் ஓங்க முடியும்.

இந்த இயல்பான எதிர்ப்பு சக்தி பாழாவது எப்போது? சாதாரணமாக வயதாக வயதாக, பலவீனமடையலாம். மற்றவர்கள்? மேலே சொன்ன மாதிரி, சுற்றுப்புறம் மாகபடுதல், தேவையற்ற பழக்கங்கள் இவற்றாலேயே பலவீனப்பட்டு நோய் எதிர்ப்பு சக்தியை இழந்து விடுகிறார்கள்.

நாள் ஒன்றுக்கு இரண்டு பாக்கெட் சிகரெட் பிடிப்பவர்களுக்குப் புற்றுநோய் வரக் கூடிய வாய்ப்பு மற்றவர்களை விட இருபத்தைந்து மடங்கு அதிகம். கண்டபடி மது அருந்திவிட்டுப் புகையும் பிடிக்கிறவர்கள் மரணத்துக்கு வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பு விடுக்கிறவர்கள் என்றே சொல்லலாம். இவர்களுக்கு வாய், தொண்டை, குரல்வளை, குடல் என்று ஏகப்பட்டஇடங்களில் புற்றுநோய் தொற்றிக் கொள்ள வாய்ப்பு உள்ளதாம்.

புகையிலைச் சத்தைக் கரைத்துக்கொண்டு செல்லக் கூடியது ஆல்கஹால். இதனால் புற்றுநோய்த் தொல்லையை நேரடியாகவே திசுக்களுக்குக் கொண்டு போகக் கூடிய திறமை குடிப்பழக்கம் + புகைக்குஉண்டு.

இவ்வளவும் உண்மையானாலும், குடிப் பழக்கமும் புகைப் பழக்கமும் தயாரிப்பாளருக்கும் அரசுக்கும் குவித்துக் கொட்டுகிற பணத்தின் அளவு எவ்வளவு? விட்டுவிடுவார்களா என்ன?

பூச்சிக் கொல்லிகள் விவகாரம் என்ன? இவற்றில் உள்ள ரசாயன விஷம் நேரடியாக நம் உணவில் கலப்பதில்லை. ஓடைகளிலும், ஆறுகளிலும், ஏரிகளிலும் சிறுகச் சிறுகக் கலந்து விடுகிற இந்த விஷம், நீரைப் பருகுகிற லட்சக்கணக்கான சாதாரண மக்களுக்கு ஆபத்தை உண்டாக்குகிறது.

உணவு சம்பந்தமான ரசாயனப்பொருள்கள் இன்னொருபுறம் மிரட்டுகின்றன. விதம் விதமான உணவுப் பொருள்களுக்கு நிறமேற்றிகளாகவும், கெட்டுப் போகாமல் பாதுகாக்கப் பயன்படும் பொருளாகவும், மணம், சுவையூட்டும் பொருளாகவும் பயன்படுகிற ரசாயனப் பொருட்கள், குடல் சம்பந்தமான புற்றுநோய்க்கு இடந்தருகின்றன.

ஆடம்பரமான உணவுப் பொருள்களின் தயாரிப்பாளர்களுக்கு அவற்றில் அடங்கியுள்ள சத்துப் பொருள் இரண்டாம்பட்சம் தான். கவர்ச்சியான நிறம், சுவை, அமைப்பு — இவைதான் முக்கியம். இந்தக் கவர்ச்சிகளோடு சேர்ந்து, புற்றுநோய் உருவாக்கும் விஷத்தன்மையும் உடலுக்குள் ஊடுருவுகிறது.

கருத்தடை சமாசாரம் அடுத்த பயங்கரம். புற்றுநோய் நிபுணர் டாக்டர் சாமுவல் எப்ஸ்டின், கருத்தடை மாத்திரைகள் பயன்படுவது பற்றிக் கூறும்போது, ''மனிதர்களிடம் பரிசோதனை செய்யப்படும் கட்டுப்படுத்த முடியாத மிகப் பெரிய புற்றுநோய்பரப்பிகள்'' என்று கூறுகிறார். இதன் காரணமாகக் குடல், கழுத்து, மார்பகப் புற்றுநோய்களுக்கான வாய்ப்பு அதிகமாகிறதாம்.

புற்றுநோய்க்கு எதிரான போராட்டத்தில் நாம் தோற்றுப் போய்க் கொண்டிருக்கிறோம்.

சுற்றுச் சூழலில் விதம் விதமான விஷப் பொருள்களை நாளும் பரப்புகிற, தொழிற்சாலைகளும், பரவுவதை அனுமதிக்கிற அரசாங்கங்களும் உள்ளவரை இந்தத் தோல்வி நீடிக்கத்தான் செய்யும்.

—சுப்ரபாலன்

நன்றி: பி. எச். பி.

# எப்படி எழுதுவது எப்படி?



புத்தக உலகில் சிறுகதை, நாவல், கவிதை இவைகளுக்கு இப்போது மவுசு இல்லை. ''முன்னுக்கு வருவது எப்படி'' ''பணக்காரர் ஆவது எப்படி'' போன்ற புத்தகங்களுக்குத் தான் நிறைய டிமாண்ட். கடைசியாக ''சந்தியா வந்தனம் செய்வது எப்படி'' என்று கூட புத்தகம் பிரசுரமாகி விட்டது. இந்தப் போக்கை யொட்டி கீழ்க்காணும் புத்தகங்களும் வெளியிடலாமே?

## ஸ்கூலில் சேர்ப்பது எப்படி?

எல். கே. ஜி.யிலிருந்து ப்ளஸ் டூ வரை சிறுவர்களை எப்படிப் பள்ளிக்கூடத்திலே சேர்ப்பது என்பதை விவரிக்கும் புத்தகம். எந்தெந்தப் பள்ளிகளில் சேர்வதற்கு யார் யார் சிபாரிசு வேண்டும், நன்கொடை எவ்வளவு போன்ற சகல விவரங்களும் தரலாம். பள்ளிகளின் பெயர்களும் ஊர்களும் அட்டவணையாகக் கொடுக்கலாம்.

அடிக்கடி மாற்றலாகும் உத்தியோகஸ்தர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதமாயிருக்கும்.

## தேர்தலில் ஜெயிப்பது எப்படி?

இடைத் தேர்தல்கள், சட்ட சபைத் தேர்தல், நாடாளு மன்றத் தேர்தல் போன்ற ஒவ்வொரு தேர்தலிலும் கடைப்பிடிக்க-வேண்டிய விதிமுறைகளைத் தொகுத்துத் தரலாம். பேச்சுப் பாணி, கும்பிடு வகை, வாக்காளர்களை அணுகும் விதம் முதலிய விவரங்கள் அனுபவ பூர்வமாக, புகைப் படங்களுடன் விவரிக்கலாம்.

தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வோர் ஊரிலும் உள்ள ஜனத்தொகை ஜாதி வாரியாக; மாவட்ட, ஜாதிப் பேச்சு வழக்குகள்—இவை கண்டிப்பாக இடம்பெற வேண்டும்.

## சகல கலா வல்லவன் ஆவது எப்படி?

ஒரு துறையில் பிரகாசிப்பது அந்தக் காலம். எல்லாத் துறைகளிலும் கொடி கட்டி விளங்குவது இந்தக் காலம். சோ, டி. ராஜேந்தர், மதுரை சேஷ கோபாலன், போன்ற பலரது அனுபவங்களைப் பேட்டி கண்டு எழுதலாம்.

## தண்ணீர்ப் பஞ்சத்தைச் சமாளிப்பது எப்படி?

பொதுமக்களுக்குக் கவலை இல்லை. குளிக்காமலோ அல்லது வெளி ஊருக்குப் போயோ இப்பஞ்சத்தைச் சமாளித்து விடுகிறார்கள். ஆனால் அரசு? அதற்கு சால்ஜாப்புகளும் சமாதானங்களும் தேவையல்லவா?

சுதந்திரம் வந்த நாளிலிருந்து இதுவரை அவ்வப்போது பருவ மழை இல்லாது போன வருடங்கள், அப்போதைய அரசாங்கம் திட்டம் போடத் தவறியது. போன்ற பல விவரங்கள் வரிசையாகக் கொடுக்கலாம். ஆளும் கட்சிக்கு இது ஒரு பொக்கிஷமாகத் திகழும். சகட்டுமேனிக்குச் சாக்குப் போக்குகள் கூறலாம்.

## எம்.எல்.ஏ. ஆக ஜொலிப்பது எப்படி?

சட்டசபைக்குள் சென்று மக்கள் பிரச்னைகளை இப்போது அலசத் தேவையில்லை. பாதரட்சையை எவ்வாறு குறிபார்த்து வீசுவது. என்னென்ன தகாத வார்த்தைகள் உபயோகிப்பது. ஆதாரமற்ற குற்றச்சாட்டுகள் என்னென்ன கற்பனை செய்யலாம் — இவையெல்லாம் இந்நூலில் கற்றுத் தரலாம். இரு பொருள் தொனிக்கும் சொற்களை ஒரு தொகுப்பாகக் கொடுக்கலாம்.

—'ஈஸ்வர் குமார்'



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

# டூ-இன்-ஒன்



போர்ஹென்ஸ்
டபிள்—ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

பற்களை சுத்தம்
செய்யும்
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுக்கும்
மென்மையான
வெள்ளைக்
குச்சங்கள்

**போர்ஹென்ஸ்**

டூ-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

276 F-203 TAM